# திவ்யப் பிரபந்த

## அருஞ்சொல் அகராதி




ஆசிரியர்
சு.பாலசாரநாதன்

மின்னாக்கம்
ரவிக்குமார்
வள்ளுவர் வள்ளலார் வட்டம்

அக்காக்காய் = சிறுபிள்ளைகளுக்குக் குழல் வாருவார் சீராட்டாகச் சொல்லும் பாசுரம்

அக்காணி = ஸ்தூல சரீரம்

அக்காரம் = வெல்லம், அக்ஷாரம்

அக்காரம் = கருப்புக்கட்டி, இக்குரஸம், கரும்புச் சாறு

அக்காரக்கனியே = சருக்கரைக்கனியே

அக்காரவடிசில் = சர்க்கரைப் பொங்கல்

அக்கு = எலும்பு, உருத்திராக்கம்

அக்குவடம் = சங்குமணி மாலை

அகடு = வயிறு, நடுவிடம்

அகப்பணி = அந்தரங்க கைங்கரியம்

அகம் = சித்தம், நெஞ்சு, இடம்

அகம்படி = உள்ளிடம்

அகம்படியர் = அந்தரங்கர்

அகமகந்தோறும் = நின்ற இடங்கள் தோறும்

அகமேனி = ஆத்மஸ்வரூபம்

அகலம் = பரப்பு, மார்பு

அகலிடம் = பூமி

அகவலை = வலையின் உள்ளிடம்

அகவலைப்படுத்தல் = வசப்படுத்தல்

அகாரியம் = செய்யத் தகாததொழில்

அகைப்பு = மதிப்பு

அங்கம் ஆறு = சிக்ஷை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கல்பம்

அங்காத்தல் = வாய்திறத்தல்

அங்கி = அக்கினி

அங்குத்தை = அங்கு உண்டாகும் செயல்

அங்குற்றேனல்லன் = அவ்விடத்தும் புகுந்தவனல்லேன்

அங்கையில் வட்டு = உள்ளங்கையிலுள்ள கருப்புக்கட்டி

அச்சன் = நாதன், சுவாமி

அச்சுதன் = அடியார்களை நழுவவிடாதவன், அழிவில்லாதவன்

அச்சோ = அணைத்துக்கொள், ஆச்சரியம்

அசும்பு = நீர்ப்பெருக்கு, சேறு, கல்மஷம்

அசுரர் = தேவர்களுக்கு விரோதிகள் பிரமன் தொடையில் உதித்துப் பிரமனைப் பெண்ணாக நினைத்து விரும்பியமையால் அசுரர் ஆயினர்

அசோகின் இளந்தளிர் = அசோகமரத்தின் இளந்தளிர்கள்

அஞ்சலோதி = ஐம்பால் அஞ்சு + அல்+ ஓதி, சுருட்சி, நீட்சி, குளிர்ச்சி, அழகு, பரிமளம், என்ற ஐந்து வகையான தன்மைகளையுடைய கருமையான கூந்தல்

அஞ்சனத்தினீறு = மையின் சுண்ணம் அஞ்சனம், மை

அட்டகில்லேன் = வார்க்கமாட்டேன்

அட்டல் = வார்த்தல், சமைத்தல்

அட்டி = இட்டு (போஜனம்)

அட்டுக்குவி சோற்றுப்பருப்பதம் = சமைத்துக் குவிக்கப்பட்டசோறாகிய மலை

அட்டைகள் = சுவைப்பர்

அடம்பு = ஒருவகைக் கடம்பு

அடல் = வலிமை, போர், கொல்லல், சமைத்தல், அடல், போர்

அடலாழி கொண்டான் மாட்டன்பு = பராக்கிரமம் பொருந்திய சக்கரத்தைக் கையிலே கொண்டுள்ள பெருமானிடத்தில் செலுத்திய அன்பு

அடிக்கண்ணணி சூடிய மாறன் = திருவடிகளாகிற பூமாலையை முடிக்கு அணிந்த நம்மாழ்வார்

அடிகள் = சுவாமி

அடிக்கொட்டிட = அடியைச் சேர

அடிச்சி = அடியவள் (வெள்ளாட்டி)

அடிச்சியோம் தலைமிசை = உன் அடியவர்களாகிய எங்களுடைய தலையின் மேல்

அடிதாறு = அடிக்கு அளவாக இருத்தல், பாதுகை, பாதரேகை

அடி நிலை ஈந்தான் = திருப்பாதுகைகளை அளித்தவன்

அடிநீறு = அடிப்பொடி

அடிநீறு கொண்டு = ஸ்ரீபாத தூளியைக் கொண்டு

அடியுறை = ஸ்ரீ பாத காணிக்கை

அடியேன் மனம் புகுந்ததேனே = அடியேனுடைய மனத்தில் புகுந்த தேன் போல் இனியவளே

அடிவீழ்ச்சி = அடியாட்டி, அடியாள்

அடுதல் = சமைத்தல், கொல்லுதல், வருத்துதல்

அடை = இலை

அடைக்காய் = வெற்றிலைப்பாக்கு

அடைபுடை = அகோராத்திரம் (இரவும் பகலும்)

அண்டம் = அண்டகபாலம், மேலுலகம்

அண்டர் = இடையர், நித்யசூரிகள்

அண்ணல் = பெருமையுடையவன்

அண்ணா = தலைவா

அண்ணிக்கும் = தித்திக்கும்

அணங்காடு மிளந்தெய்வம் = தெய்வ ஆவேசங்கொண்டு ஆடுகின்ற அற்ப தெய்வம்

அணங்கு = தெய்வமகள், வருத்தம்

அணர் = மோவாய்க்கட்டை

அணவி = அணைந்து

அணார் = கழுத்து, கழுத்துக்கீழ் உறுப்பு

அணுக்கர் = சமீபத்திலிருப்பவர்

அணுக்கன் = அந்தரங்கன்

அணை = படுக்கை

அத்தன் = மிடுக்கன்

அத்தாணிச்சேவகம் = பிரியாமல் நெருங்கிச் செய்யும் சேவை, அருகான இடம், ஆஸ்தானம்

அத்திரம் = அம்பு

அதக்கி = அடக்கி

அதகன் = பகைவரைக் கொல்லுவோன்

அதர் = வழி (புழுதி)

அதவி = அடர்த்து

அதவுதல் = நெருக்குதல்

அதள் = தோல்

அந்தகன் = குருடன், இயமன்

அந்தணன் தோட்டம் = அக்கினி ஹோத்திரியான அந்தணனுடைய தோட்டம்

அந்தண்மை = பிராமணத் தன்மை

அந்தது = அப்படிப்பட்ட பிராப்யவஸ்து

அந்தமில்பேரின்பம் = முடிவில்லாத பேரின்பம்

அந்தரம் = இடையூறு, தாமதம், இடைவெளி

அந்தரி = துர்க்கை

அந்தி = மாலைப்பொழுது

அந்தி காலவன் = சந்திரன்

அந்தி மூன்று = காலை, உச்சி, மாலை

அந்தியம் போது = சந்தியாகாலம்

அந்நான்று = அக்காலம், அன்று

அநகன் = குற்றமற்றவன்

அநங்கதேவா = காமதேவனே

அநந்தன் = ஆதிசேஷன்

அநுராகம் = ஆசை

அப்பில் = நீரில்

அபிமான துங்கன் = அகங்காரத்தால் உயர்ந்தவன்

அம்பரம் = ஆடை, ஆகாயம்

அம்பு = நீர்

அம்புதம் = மேகம்

அம்புயம் = தாமரை

அம்புலி = சந்திரன்

அம்மணி = அரை (இடுப்பு)

அம்மமுண்ணா = முலைப்பால் பருக

அம்மணைமார் = தாய்மார்

அம்மா = சுவாமியே

அம்மா நின்பாதத்தருகு = ஸ்வாமி தங்களுடைய திருவடிகளின் சமீபத்தில்

அமணர் = சைனர்

அமம் சூழ்ந்து = வியாபித்து

அமரர்களதிபதி = தேவராசன், நித்திய சூரியர் தலைவன்

அமருலகு = தேவருலகு, பரமபதம்

அமுக்கி = நன்றாகப்பூசி

அமுதிலுமாற்றவினியன் = அமிர்தத்தைக் காட்டிலும் மிக்க இனியவன்

அமை = மூங்கில்

அயர்வில் அமரர்களாதிக் கொழுந்து = நித்ய சூரியகளுக்குக் காரணமான தலைவன்

அயராப்பாய் = மறவாதிருக்கில்

அயன்வாளி = பிரமாத்திரம்

அயில் = வேல், கூர்மை

அரக்க நில்லா = அரக்க = அடக்க

அரக்கன் போல்வானை = மாவலியை

அரக்கிலச்சினை = அரக்கு முத்திரை

அர்த்த பஞ்சகம் = ஸ்வஸ்ரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், உபாய விரோதி ஸ்வரூபம்

அரக்கர் = ராட்சஸர்

அரக்கு வழித்தது = அரக்கு, செந்நிறம் வழித்தது, பூசியது

அரக்கும் = அழுத்தும்

அரங்குதல் = அழிதல்

அரசாணி = அரசங்கொம்பு

அரசிப்படுதி = அரசியின் தன்மை அடைகிறாய், கோபியா நின்றாய்

அரட்டன் = தீம்பன், மிடுக்கன்

அரட்டமுக்கி = சத்துருக்களை அமுங்கச் செய்வர்

அரணம் = ரக்ஷகம், புகல்

அரந்தை = துக்கம்

அரம்பா = தீம்பனே

அரம்பையர் = தேவமாதர்

அரவதண்டம் = யமதண்டனை

அரவப்பகையூர்தி = கருடனைவாகனமாக உடைய கண்ணன்

அரவு = பாம்பு

அரனே = உருத்திரனுடையதே

அரி = திருமால்

அரிகுரல் = தழுதழுத்த குரல்

அரிகுலம் = குரங்குக் கூட்டம்

அரிசினம் = மிக்க கோபத்தினால்

அரியயனரன் = திருமால், பிரமன், சிவன்

அருகல் = சமீபம், சுருங்கல்

அருத்தி = ஆசை

அருத்தித்தல் = பிரார்த்தித்தல்

அருபொருளை = அரிய பொருளை

அருவித் தின்றிட = அலைத்துத்தின்ன

அருவிவேங்கடம் = அருவிகளையுடைய திருமலை

அரைத்தொடர் = அரைவடம்

அல்குல் = அரை, நிதம்பம்

அல்லல் = பாவம், துக்கம்

அல்லி = அகவிதழ் தாமரை

அல்லிமாதர் = இலக்குமி

அலக்கண் = துன்பம்

அலக்கழித்து = கிலேசப்படச்செய்து

அலகு = விதை

அலம்பி = கிண்டி

அலம்புதல் = அலையச்செய்தல்

அலத்தல் = கிலேசப்படுதல், கதறி அழுதல்

அலந்தலை = கலக்கம்

அலப்பாய் = அலமந்து

அலம் = கலப்பை

அலமருதல் = கழலுதல்

அலர் = மலர்

அலர்மேல் மங்கை = திருமகள்

அலவலை = கண்ணணன் கூடார்த்தங்களைச் சொல்பவன்

அலவலைமை = அற்பத்தனம், அலைச்சல் தன்மை

அலவன் = ஆண் நண்டு

அலவை = வஞ்சகமுள்ளவள்

அலவைப் பெண் = கெட்டவளான பூதனை

அலற்றி = வாய்விட்டுக்கூவி

அலற்றி = முறைகெடக்கூவி, கூப்பிட்டுநின்று

அலற்றிய = கூப்பிட்ட

அலற்றும் = கூப்பிடும்

அலற்றுவதென் = கூப்பிடுவதனால் என்ன பயன்

அலற்றுவதே = துதிப்பதே

அலற்றுவன் = முறைமாறி அவன் குணங்களை வாயாலே சொல்லுவேன்

அலறி = கதறிக்கூப்பிட்டு

அவி = நபும்ஸ கம்

அலைப்பூணுண்ணும் = அலைப்புண்ணுதலை அனுபவிக்கும்

அலைப்பூண் = அலைக்கப்படுகிற

அலோகம் = காணப்படாத உலகம்

அவத்தங்கள் = பொல்லாங்குகளான யுத்தங்கள்

அவத்தம் = அபத்தம் (பொல்லாங்கு)

அவபிருதம் = யாகத்தின் முடிவில் செய்யும் மங்களஸ்நானம்

அவம் = வீண்

அவலம் = துன்பம்

அவனியாள் = பூமிதேவி

அவா = ஆசை திருவாய்

அவி = அவிஸ் யாகங்களில் தேவர்களுக்குக் கொடுக்கப்படும் உணவு

அவுணன் = ராட்சசன்

அவை = முதல் வேற்றுமைச் சொல்லுருபு

அழக்காடி = பேய்ப்பெண் பூதனை

அழகியான் = அழகுடையவன்

அழகு = ஸௌந்தர்யம்

அழல் = நெருப்பு

அழலம்புகவூதி = அழலிற்புக

அழன் = பேய், பிணம்

அழிப்பன் = சத்ருதுக்களை அழிப்பவனாகிய எம்பெருமான்

அழுந்தூர் மேற்றிசை நின்ற அம்மானே = சோழநாட்டில் மாயூரத்தை அடுத்துள்ளது உபரிச்ரவசு என்னும் அரசன் தனது தபோ வலிமையினால் விமானத்துடன் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் தன்மையுடையவன், ஒரு சமயம் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் நேர்ந்த விவாதத்தில் பட்ச பாதகமாக இவ்வரசன் தீர்ப்புச் சொன்னமையால் முனிவர்களால் சபிக்கப் பட்டுப் பூமியில் விழுகையில் அவனது தேர் அழுந்தப் பெற்ற

இடமாதல் பற்றி இதற்கு அழுந்தூர் என்று பெயர் வந்தது கம்பர் பிறந்த இடம் தேவாரப் பாடல் பெற்ற தலமுமாகும்

அழும்புதல் = மிக நெருங்குதல்

அள்ளல் = குழைசேறு, நெருக்கம்

அள்ளல் பயலை = அடர்த்தலையுடைய பசலை நிறம்

அள்ளியம் பொழில்வாய் = குளிர்ச்சி பொருந்திய அழகிய சோலைகளில்

அளகைக்கோன் = குபேரன்

அளம்பு = உபமானம்

அளறு = சேறு

அளி = கிருபை, வண்டு

அளியத்த மேகங்காள் = தயையையுடைய மேகங்களே

அளியத்தாய் = அருமந்தநீ எல்லோராலும் கிருபை பண்ணத்தக்க நீ

அளை = வங்கு

அற்கம் = அடக்கம்

அற்புதன் = ஆச்சர்ய சேஷ்டிதங்களையுடையவன்

அற்றம் = அறுதி

அற்றேன் = வந்தடைந்தேன்

அறஞ்சுவராகி நின்ற அரங்கனார் = தருமமே சுவராக நிற்கிற அரங்கனார்

அறவன் = தருமஸ்வரூபி

அறிகண்டாய் = தெரிந்துகொள்

அறுகால் = ஆறுகால்கள்

அறுசுவை = கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, தித்திப்பு, துவர்ப்பு

அறுதல் = சீரணித்தல்

அறுதி = முடிவு, வரை

அறுதொழில் = ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்

அறை = பாறை

அறைகை = சொல்லுதல், அடித்தல், ஒலித்தல்

அறையிடுதல் = அறைகூவுதல்

அறையோ = ஐயம், முறையிடும் சொல்

அறையோ = முறையோ முறையோ

அன்றிக் கொண்டு = சீறிக்கொண்டு

அன்றில் = அன்றிற் பறவை, கிரவுஞ்சப்பறவை

அன்றிற்கூடு = அன்றில் பறவையின் கூடு

அன்றுதல் = சீறுதல்

அன்னவசம் செய்கை = உண்ட உணவிற்கு ஏற்ப இடம் வலங்கொள்ளுதல், தூங்குதல்

அன்னன்ன = அப்படிப்பட்ட

அனந்தல் = சோம்பல்

அனன்றுண்ட நீர் = (இரும்பானது) பழுக்கக்காய்ச்சப் பெற்று உட்கொண்ட நீர்

அனுங்குதல் = நோவுப்படுதல், வருந்துதல்

ஆக்கம் = செல்வம், பேறு

ஆக்கை = சரீரம்

ஆகமவாதிகள் = சைவர்

ஆதரம் = அன்பு

ஆதன்மையால் = ஆன தன்மையால், அதனால் ஆட்பட்டதனாலே

ஆதானும் = யாதானும்

ஆதித்தியன் = சூரியன்

ஆது = யாது

ஆதும் = யாதும்

ஆதுமில்காலம் = ஒன்றும் இல்லாத காலம் ஒரு துணையும் இல்லாத சம்சாராவஸ்தை

ஆதுமில்லை = யாதுமில்லை

ஆநிரை = பசுக்கூட்டம்

ஆப்பங்கொழியவும் = சரீரம் ஒழியவும்

ஆப்பு = கட்டு

ஆப்புண்ட = யாப்புண்ட

ஆப்புண்டிருந்தவனே = கட்டுண்டிருந்தவனே

ஆம்பல் = இலைக்குழல்

ஆம்பற்கழியும் = இலைக்குழலோசைக்கு அழிவாள்

ஆமருவி = பசுக்களை விரும்பி (மருவுதல் = விரும்புதல்)

ஆமுகம் = (ஆ = ஐயோ )

ஆமைத்தாலி = ஆமைவடிவமாகச் செய்யப்பட்ட தாலி

ஆய்க்குலம் = இடைக்குலம்

ஆய்ந்தேத்த வல்லார் = ஆராய்ந்து துதிக்க வல்லவர்கள்

ஆய்ப்பாலர் = இடைச்சியர்கள்

ஆயப்பிள்ளை = கண்ணன்

ஆயம் = தோழியர் கூட்டம், வேலைத்திறம், சிநேகம்

ஆயர்குலம் = இடைக்குலம்

ஆயர்கொழுந்து = கோபாலருக்குச் சிரோபூஷணம்

ஆயர்கொழுந்தே = இடைக்குலத்தலைவனே

ஆயர்பாடி = இடைச்சேரி

ஆயர்பாவை நப்பின்னை = இடைமகளான நப்பின்னை

ஆயிரம் பேருடையவாளன் = ஆயிரம் பெயர்களையுடைய பெருமான்

ஆயிரவர் நலனேந்து திருவல்லவாழ் = ஆயிரம் பேர் தன்னுடைய கலியாண குணங்களைக் கொண்டாடும் படியாகத் திருவல்ல வாழில் எழுந்தருளியிருக்கின்றவன். இத்திருப்பதி கொட்டாரக்கராவிலிருந்து கல் தொலைவில் உள்ளது நின்ற திருக்கோலம் நாச்சியார் செல்வத் திருக்கொழுந்து கிழக்கு நோக்கிய சந்நிதி

ஆயோ = கிளி முதலிய பறவைகள் வந்து தானியங்களை அழிக்காதபடி அவற்றை வெருட்டுவதாக ஆயல் இடுகிற சொல் அதுவோ என்று வினவுகிறபடி

ஆர்த்த = கட்டிய, ஆரவாரம் செய்தல்

ஆர்தல் = நிறைதல்

ஆர்ப்பு = பேரொலி

ஆர்படுவான் நேமி = கூர்மை

ஆர்வினவிலும் = எப்படிப்பட்ட அன்பர்கள் கேட்டாலும்,

ஆரல் = ஒருவகை மீன்

ஆராமம் = உபவனம்

ஆராமை = திருப்தி பெறாமை

ஆராவமுதம் = தெவிட்டாத அமிர்தம்

ஆராவமுது = திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கின்ற

எம்பெருமான்

ஆராவமுதே = திருமலையில் எழுந்தருளியிக்கின்ற எம்பெருமானே

ஆரியன் = ஆசாரியன்

ஆல் = தண்ணீர், ஆலமரம்

ஆலநிழலில் அறம் நால்வர்க்கு உரைத்து = ஓர் ஆலமரத்தின் நிழலில் நான்கு முனிவர்களுக்கு உபதேசித்தவன் ருத்திரன். (நான்கு முனிவர்கள்: அகத்தியர், புலத்தியர், தக்ஷர், மார்க்கண்டேயர்) என்று அண்ணங் கராசாரிய சுவாமிகள் உரை காண்கின்றார். நால்வர் என்பது சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் இவர்களைத்தான் எல்லா நூல்களும், பாகவதமும் கூறுகின்றன அப்படியிருக்க சுவாமிகள் கண்ட உரைக்கு ஆதாரம் யாதோ? ஆலமரத்தின் சிறப்பு: நூறுயோஜனை தூரம் உயரம் உள்ளது. எழுபத்தைந்து யோஜனை நீளமுள்ள கிளைகளையுடையது எங்கும் நிழலையுடையது தாபமற்றது. உயர்ந்த யோகத்தின் ஸ்வரூபம் மோட்சமடைய விருப்பமுள்ளவர்களுக்கு ஆசிரயமுமானது

ஆலி = சிறுதுளி

ஆலித்தல் = ஆரவாரஞ்செய்தல்

ஆவிநகர்க்கதிபதியே = திருவாலி நகர்க்கு தலைவனே. இத்திருப்பதி சோழ நாட்டில் சீகாழியிலிருந்து ஆறுகல் தொலைவில் உள்ளது திருமகள் எம்பெருமானை ஆலிங்கனம் செய்தமையால் 'ஆலி' ஆயிற்று இவ்வூருக்கு அருகிலுள்ள வேதராஜபுரத்தில் பங்குனி உத்திரத்தில் திருமங்கையாழ்வார் திருமாலை வழிபறித்த வேடுபறி உற்சவம் நடைபெறுகிறது எம்பிரான் வயலாலி மணவாளன்

ஆவிவளநாடன் = திருவாலி நாட்டிற்க்குத் தலைவன்

ஆலிலை யன்னவசம் செய்யும் = ஆலிலையிலே தூங்குகின்ற

ஆலுதல் = ஆடுதல் கூவுதல், சப்தித்தல், பொருந்துதல்

ஆவத்தனம் = ஆபத்துக்காலத்தில் உதவும் செல்வம்

ஆவத்தனம் = ஆபத்தனம்

ஆவர் = யாவர்

ஆவலிப்பு = பலம், கர்வம்

ஆவித்தல் = நெடுமூச்சுவிடுதல், கொட்டாவி கொள்ளுதல்

ஆழ்பொருள் = எளிதில் அறிய முடியாத பொருள்

ஆழ்தல் = மூழ்குதல், ஆழமாதல்

ஆழமோழை = கீழ்த்திசையில் பெருகும் ஆறு

ஆழாந்து = ஆழ்ந்து, ஈடுபட்டு

ஆழி = சக்கராயுதம், கடல், சூரியன், வட்டவடிவம்

ஆழியான் = ஆழ்ந்து தேறியவன்

ஆள் = ஆண்மகன், காலாள்

ஆளம்வைத்தல் = ஆலாபித்தல்

ஆளரி = நரசிங்கம்

ஆளி = சிங்கம்

ஆற்றல் = பராக்கிரமம் (கீர்த்தித்திருவகவல் )

ஆறு = விதம்

ஆறுசமயம் = சார்வாகம், பௌத்தம், க்ஷபணம், வைகம், சாங்கியம், பாசுபதம்

ஆறுபொதி சடை = கங்கையைத்தரித்த சடை

ஆன் = பசு

ஆனாத = அழியாத

ஆனாய் = ஆனையே

ஆனாயன் = மாட்டிடையன்

ஆனாயனாகி = மாடுமேய்க்கும் இடைக்குலத்தவனாகி

ஆனெய் = பசுவின் நெய்

ஆனைச்சாத்தன் = பாரத்துவாசம், வலியன்

இகல் = பகை, போர்

இருளாய் = தோழியாய்

இங்குத்தை = இவ்விடத்திய

இங்குத்தை நின்றுந்துரப்பன் = இவ்விடத்தினின்றும் உன்னை ஓட்டி விடுவேன்

இங்குற்றேனல்லேன் = இங்கு நிற்கமாட்டேன் (பிறரோடு பொருந்துகிறதில்லை என்று கூறினும் பொருந்தும்)

இங்கே = இங்கு

இசலி = இகலி

இசலுதல் = பேரொலி செய்தல்

இசித்தல் = இழுத்தல் பெரிய

இசை = இராகம், உடன்பாடு

இசைகாரர் = பாடுபவர்

இட்டம் = இஷ்டம், விருப்பம்

இட்டாதெய்வம் = இஷ்டமான தேவதை

இட்டிடை = சிறிய இடுப்பு

இட்டீடு = பரிகாசச்சொல்

இட்டீறு = களிப்புடன் செய்யும் விளையாட்டு

இடங்கை = இடக்கை

இடங்கொள்ளுதல் = வியாபித்தல்

இடத்தல் = பிளத்தல்

இடம் பெறுதல் = இடம் பெற்றிருத்தல்

இடமுடைமை = விசாலமானதாயிருத்தல்

இடர் = துன்பம்

இடராட்டியேன் = துன்பமுடைய

இடவகை = வசிக்குமிடம்

இடவணரை = இடத்தோளோடு சாய்த்து

இடவன் = மண்கட்டி

இடற = தட்டித் திரியும்படி

இடறி = கடந்து

இடறுதல் = துன்புறுதல்

இடறும் = சுழலானின்ற

இடிசேர் = இடியை ஒத்த

இடித்தல் = தகர்த்தல்

இடிதல் = கட்டுக்குலைதல்

இடுக்குண்ட = நெருக்குற்ற

இடுகை = கொடுக்கை

இடும்பை = துன்பம், பெரிய

இடைகழி = இடைக்கட்டு

இடையில்லை = அவசாசமில்லை

இடையுவா = பௌர்ணமி

இடைவீடின்றி = இடைவிடாமல்

இண்டைக்குலம் = நெருங்குதலையுடைய கூட்டம்

இண்டை கொண்டு = பூமாலைகொண்டு

இண்டைச்சடை முடியீசன் = மாலையையும், ஜடையையும், கிரீடத்தையும் உடைய உருத்திரன்

இணக்கம் = சகவாசம், பொருத்தம்

இணர் = பூங்கொத்து

இணைந்து = கலந்து

இணைவனாம் = சமனாகியிருப்பான்

இத்தனை = இவ்வளவு

இதணம் = பரண்

இந்திரகோபம் = தம்பலப்பூச்சி

இந்திர ஞாலங்கள் = பொய்யான வித்தைகள்

இந்திரலோகம் = இந்திரனது உலகம்

இந்திரன் சிறுவனை = அருச்சுனன்

இந்து = சந்திரன்

இமம் = பனி

இமவந்தம் = இமயமலை

இமில் = கழுத்து

இமையவர் = தேவர்

இயக்கர் = யக்ஷர்

இயக்கு = துன்பம்

இயங்கல் = செல்லுதல்

இயத்தல் = கடத்தல்

இயந்த = இகந்த

இயல் = இலட்சணம்

இயல்வு = விரகு

இரண்டத்தில் = இரண்டில்

இரண்டுதறுகண் = இரண்டு திருக்கண்கள்

இரந்தார் = யாசிப்பவர்

இரவியர் =சூரியர்

இராக்கதி = ராக்ஷஸி

இராகம் = இசைப்பாட்டு, ஆசை

இராவணாந்தகன் = இராவணனைக் கொன்றவன்

இரிதல் = ஓடுதல்

இரிய = ஆரவாரித்து

இரீஇ = இருத்தி

இருக்கு = வேதம்

இருடீகேசன் = இந்திரியங்களையடக்கியாள்பவன்

இருந்தில் = கரி

இருபாடெரி கொள்ளியின் உள்ளெறும்பே போல் = இரும்பு நான்றுண்டநீர்போல், இரும்புபோல் வலிய நெஞ்சம், இரைதேரும் புதாவினங்காள், பெருநாரை

இல்லம் = வீடு

இல்லம் வெறியோடிற்று = வீடு வெறிச்சென்றிருக்கிறது

இல்லி = சிறுவழி

இலக்கு = குறி

இலகுதல் = விளங்குதல்

இலச்சினை = அடையாளம், முத்திரை

இலட்டுவம் = வட்டு

இலிங்கியர் = இலிங்கப்பிரமாணவாதியரான அநுமானியர்

இலைக்குடை நீழல் = இலையாகிற குடையின் நிழல்

இலைக்குழலூதி = இலையினால் ஆகிய ஊது குழல்

இலையம் = இலை

இவரித்தல் = எதிர்த்த ல்

இவரித்து = ஏறி

இவள் பரமே = இவளிடம் உண்டாகக் கடவதோ

இவையா = இவை இருக்கிறபடி பாராய்

இழந்ததுகட்டே = லோக மரியாதையை இழந்தாள்

இழந்தது கற்பே = தன்னுடையச் சாயே

இழந்தது மாமை நிறமே = அழகிய நிறத்தை இழந்தாள்

இழுக்காய்த்து = குற்றமாகியது

இழிசிய = எழுதப்பட்ட

இள்கி = வஞ்சித்து

இளக = இல்லையாக

இளம்படி = மிருதுஸ்வபாவம்

இளைதே = பிள்ளைத்தனமே

இளமையாடும் = பால்ய சேஷ்டைகளைச் செய்யும்

இளையாப்பாய் = தளராதொழிவாய்

இற்றைப்பறை கொள்வான் = பிரயோசனம்

இறப்பு = மரணம், மோட்சம்

இறவு = முடித்தல்

இறுகல் = அழுந்தல்

இறுத்தல் = செலுத்துதல்

இறை = சிறிது, அரசன், கடவுள், கப்பம்

இறைகளவை = சரீரங்களாகிய அவை

இறைஞ்சென் = மனனே

இறைநிலை = பரமாத்ம ஸ்வரூபம்

இறையான் = சிவன்

இறையிறை யுருகும் வண்ணம் = கொஞ்சம், கொஞ்சம்

இன்பமாரி = இன்பத்தையுண்டாக்கும் மேகம்

இன்மை = இல்லாமை

இன்னாமை = துன்பம்

இன்னாரினையார் = இவர் இப்படிப்பட்டவர்

இனமலரெட்டுமிட்டு = செங்கழுநீர், செண்பகம், இருவாட்சி, பாதிரி, புன்னை, குருக்கத்தி, கருமுகை, தாமரை, அஷ்டவித புஷ்பம் ஆசார்ய ஹ்ருதயம்

இனிதிரை = இனிதுதிரை கடைக்குறை, திரை இனிது, அலைகள் இனிதாக

இனியெம்பரமே = பரம், வசம்

ஈசன் = சிவன்

ஈசிபோமின் = சீசீ போங்கள்

ஈட்டம் = கூட்டம்

ஈட்டுதல் = திரளுதல்

ஈடுமெடுப்புமிலீசன் = குற்றம் பார்த்துத் தள்ளுகையும், குணம் பார்த்துக் கொள்ளுகையும் இல்லாத எம்பெருமான்

ஈப்பாய் = ஈவாய்

ஈர்த்தல் = இழுத்தல்

ஈர்மை = அறுக்குந்தன்மை

ஈர்மை கொள்தேவர் = அன்புடைய தேவர்கள்

ஈர்மை செய்து = ஈடுபடுதல் செய்து

ஈரியாயிருப்பாள் = அன்புள்ளவளாய் இருப்பாள்

ஈவிலாத தீவினைகள் = நாசமில்லாத தீவினைகள்

ஈவு = நாசம்

ஈளை = கோழை

ஈளையேங்கி = கோழையாலே இளைத்து

ஈற்றுத்தாய் = பெற்றதாய்

ஈன்துழாய் = போக்கியமான திருத்துழாய்

ஈன் துழாயானை = இனிய துளசிமாலையையுடைய திருமால்

ஈனமர் சாபம் = தன்மை பொருந்திய சாபம்

உக்கம் = ஆலவட்டம்

உகட்டுண்டு = உகட்டு, உவட்டு

உகவை = சந்தோஷம்

உகிர் = நகம்

உகைத்தல் = உபேக்ஷித்தல்

உச்சிமணிச்சுட்டி = தலையிலே அணியத்தக்க ஒரு ஆபரணம்

உட்கண் = ஞானக்கண்

உட்கு = பெருமை, அச்சம்

உடல் உள் அவிழ்ந்து = சரீரமும், மனமும் நெகிழ்ந்து

உடலையுள் = உடலுள்

உடன் = ஒருங்கு

உடுக்கை = உடைத்தோல்

உடைமணி = அரையில் கட்டிய மணிகள்

உணங்கல் = உலர்தல் (புழுக்கப்பட்ட நெல்)

உணர்வத்தொடு = ஞானத்தோடு

உத்தரவேதி = யாகசாலை

உத்தாணம் = எடுத்தல்

உதரம் = வயிறு

உந்தி = கொப்புழ்

உந்தி பறக்கை = மகளிர் குழாம் உந்தி விளையாட்டு ஆடுதல்

உபகாரம் கொள்ளாது = உபகாரத்தைக் கொள்ள முயலாமல் (தொண்டுகள் செய்கையாகிற உதவியைப் பெறமுயலாமல்)

உம்பர் = மேலிடம், தேவர்

உம்பர்கோன் = இந்திரன்

உமர் = உம்மைச் சேர்ந்தவர்

உய்வு = பிழைப்பு

உயர்த்துணவு = ஞானம்

உயிர்நிலை = சீவாத்ம ஸ்வரூபம்

உயிர்ப்பு = மூச்சு

உயோகுதுயில் = யோகநித்திரை எல்லாவற்றையும் அறிந்து கொண்டே தூங்குதல்

உரப்புதல் = அதட்டுதல்

உரப்பாள் = அதட்டாள்

உரம் = பலம், மார்பு

உரவு = விஷம்

உரு = ரூபம், தேகம்

உருப்பன் = உருக்குமன்

உருப்பிணி = உருக்குமிணி

உருப்பொலிகை = தழும்பேறுதல்

உருமகம் = நரமேத யாகம்

உருவறை = அவலக்ஷணம்

உருவெண்ணும் = கணக்கெண்ணும்

உரைக்கியம் = சொல்லுவம்

உரோடம் = ரோஷம்

உரோமகூபம் = மயிர்ச்சிலிர்ப்பு

உலக்க ஓதுவனே = எப்படி முடியச் சொல்லுவன்

உலக்க = முடியக் கண்டு

உலங்கு = பெரு நுளம்பு, பெருங்கொசுகு

உலங்குண்ட விளங்கனி = பெருங்கொசுக்கள் உண்ட விளாம்பழம்

உலப்பு = வறட்சி, அழிவு

உலாகின்ற = கெண்டை, உலாவுகின்ற

உலோபாய் = உலோபமற்றிரா நின்றாய்

உவணம் = கருடப்பட்சி

உவரி = கடல்

உவலை யாக்கை = அருவருப்பான உடம்பு

உவனியம் = உபநயனம்

உழக்குண்டு = துன்பப்பட்டு

உழலையென்பு = உழலைத்தடி கோத்தாற்போலேயிருக்கின்ற எலும்புகள்

உழறா நெகிழ்ந்தாய் = கலங்கி

உழறியுண்ணண = துகைத்து

உழறுதல் = துகைத்தல், கலங்குதல்

உழிதருதல் = அலைதல்

உழுவை = புலி

உழை = புள்ளிமான்

உள்ளுதல் = நினைத்தல்

உற்றாறிலி = கண்டு கிட்டினாரில்லாத

உறகல் = உறங்கல், உறங்கவேண்டா

உறகுதல் = உறங்குதல்

உறல் = ஸ்பரிசம்

உறிகள் போல் மெய் நரம்பெழுந்து = உடலிலுள்ள நரம்பகள் உறிகளைப் போல வெளியே தெரியும்படி

உறுகை = கிட்டுகை, சேருகை

உறுவது = உற்றது

உறைக்கும் = பொல்லாதாய் முடியும்

உறைப்பன் = மிடுக்கன்

உன்மத்தர் = பைத்தியம் பிடித்தவர்

உன்னி = நினைத்தற்குரியவன்

உன்னித்து = நினைத்து, அனுசந்தித்து

உன்னுடைய சுண்டாயம் நானறிவன் = உன்னுடைய வஞ்சகத்தை நான் அறிவேன்

உன்னை என்னுள்ளே குழைத்தாய் = என்னோடு ஒன்றாகக் கலந்தாய்

உனக்கேயறக் கொட்டு = உனக்கென்றேயற்றொழிய

ஊக்கம் = முயற்சி, உயர்ச்சி, மிடுக்கு

ஊட்டம் = உணவு

ஊட்ட முதல் இலேன் = தினந்தோறும் ஊட்டி வளர்க்கத்தக்க கைப்பொருள் என்னிடம் இல்லை

ஊடல் = பிரணயகலகம்

ஊடாடுதல் = நடுவேதிரிதல்

ஊத்தை = அசுத்தம்

ஊத்தைவாய் = அசுத்தமானவாய்

ஊர்தல் = நடத்தல், பரவுதல், ஒழுகுதல்

ஊரவர் கவ்வை = ஊராருடைய ஆரவாரம்

ஊரவர் கவ்வை எருவிட்டு = ஊரார் கூறும் பழியாகிற, எருவை இட்டு ஊரா = ஊர்ப்பசு

ஊராமிவைக்க = ஊர்வந்து சேர்ந்த கண்தெரிந்த பசுக்கள் கனைக்க

ஊழ் = முறை, விதி

ஊழ்த்தல் = கனிதல்

ஊழ்மை = முறைமை

ஊழி = கல்பம்

ஊழி = விலக்ஷண காலம்

ஊழிலை = முற்றிப்பழுத்து விழுந்த இலை சருகு

ஊளியெழ = சப்தம் எழ

ஊற்றம் = உறுதி, அனுசந்தானம்

ஊறல் = ஊறிவந்த ஸாரம்,

ஊறு = தீமை

ஊன் = மாமிசம்

ஊனகாரகர் = பிறரைக்கொண்டு தீமை செய்பவர்

ஊனக்குரம்பை = மாமிசதேகம்

ஊனில்வாழ் உயிரே = மாம்சரூபமான சரீரத்தில் வாழ்கின்ற நெஞ்சமே

எஃகு = எஃகினாற் செய்த சூலம்

எக்கல் = மேடு

எக்கே = இது என்ன கஷ்டமோ

எக்கம் = ஒரு தந்தியையுடைய வாத்தியம், தாளம்

எங்கள் குடிமுழுது = எங்களுடைய குடியிலுள்ளார் எல்லாரையும்

எட்டினோடிரண்டு = பத்து

எடுப்பு = உயர்வு

எடுவிய = எடுத்த

என்ன கண்ணானன் = பிரமன்

எண்கு = கரடி

எண்டிசை = எட்டுத்திக்கு

எண்டோளினாள் = துர்க்கை

எதிர்தல் = ஒப்பாதல்

எந்தாதை தாதையப்பால் எழுவர் பழவடிமை = பத்துத் தலைமுறை

எந்தை = என் சுவாமி

எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை = நமக்கே உற்பத்திப் பரம்பரையில் முதல்வனான சம்பந்தத்தையுடையவன்

எந்தை தந்தை தம்பெருமான் = குலநாதனான பெருமான்

எந்தை தந்தை தம்மானென்று = எம்முடைய குலநாதனென்று

எம்பரத்தல்வார் = என்னைப்போலே அடிமை செய்யார்

எம்பிராக்கள் = எம்பிரான்

எம்மனா = எமது குல தெய்வமே

எம்மாவீடு = எமக்காகத் தருகிற விலஷணமான மோட்சம்

எம்மையுடைமாடு கொண்டான் = எனது ஆடை செல்வம் எல்லாம் கொண்டான்

எம்மோய் = எனதுதாய்

எய்க்கை = இளைக்கை

எய்த்தாது = போராதொழிவது

எய்ப்பினில் வைப்பு = தளர்ந்த காலத்தில் உதவும் செல்வம்

எரி = ஒளி

எரிதி = தீ

எரியன கேசரம் = தீயைப்போன்ற உளைமயிர்

எரிவு = கோபம்

எருக்கிலைக்காக வெறிமழு வோச்சல் = எருக்கிலையை உதிர்ப்பதற்கு மழுப்படை கொண்டு ஓங்கி அடித்தல்

எருத்துக் கொடியுடையான் = இடபக் கொடியையுடையவன்

எல்லி = இரவு

எல்லே = என்னே, தோழி

எல்லே பாவம் = என்ன மகாபாவம்

எவ்வதெவ்வத்துள் = எவ்வகைப்பட்ட சத்துரு சமுகம்

எவ்வம் = துன்பம்

எவ்வும் = துன்பப்படுத்தல்

எவஞ் செய்கேன் = என்ன உபகாரத்தைப் பண்ணுவேன்

எழுநண்ணி = போக்கிலே ஒருப்பட்டு

எழப்பாய்ந்து = உயரக்கிளம்பி

எழில் = அழகு

எழுநரகம் = எழுவகையான நரகங்கள்

எழுமை = ஏழு பிறப்பு

எள்கல் = ஏய்த்தல்

எள் கலல்லால் = வருந்துதலே அல்லாமல்

எள்காது = இகழாமல்

எள்கி = மெலிந்து

எள்கி = ஈடுபட்டு

எள்கியுரைத்த = ஈடுபட்டுரைத்த

எள்கினாள் = ஈடுபட்டாள்

எள்கு நிலையும் = பையாந்து நிற்கும் நிலை

எளிவே = எளிமை

எற்றே = என்னே, ஆச்சரியக் குறிப்பு

எறிஞர் = பகைவர்

என் கடவேன் = என்ன செய்ய வல்லேன்

என்சொல்லி = என்னையும் ஒரு பொருளாகக்கொண்டு

என்பிலெள்கி = எலும்பிலே தட்டும்படி சரீரம் சிதிலமாய்

என்றும் எப்போதும் = சர்வகாலமும் சர்வாவத்தையும்

என்றேய என்னில் = ஏனெனென்னில்

என்னம்மம் = முலைப்பால்

என்னம்மா = எனக்குச் சுவாமியே

என்னானை = எனது ஆனை

என்னுசாகோ = எதனை வினாவுவேன்

என்னுயிரை யறவிலை செய்தனள் சோதீ = அறுதிக்கிரயம் செய்து விட்டேன்

என்னெற்றியுளானே = என் நெற்றியிலே புகுந்து நின்றான்

என்னே என்பாரும் இல்லை = ஐயோ என்பாரும் இல்லை

என்னைத்தன்னாக்கி = என்னைத் தன்பக்கலிலே ஞானம் அன்பு முதலியவைகளை உடையேனாம்படி செய்து

என்னைமார் = எங்கள் தமையன்மார்

எனக்காய் = எனக்குத் தாயாகியும்

எனக்கு என்றும் தேனும் பாலும் அமுதும் ஆய திருமால் = எனக்கு எப்போதும் பெருமானுடைய திருநாமம் தேனும், பாலும், அமுதும் போல பரம போக்கியமானது

எனக்கென்ன மனப்பரிப்பே = எனக்கு என்ன மனத்துயரம் உள்ளது?

எனக்கேல் = எனக்கு, ஏல் இடைச்சொல் திருவாய்,

எனைத்தோர் பலநாள் = பலகாலம் நாள் தோறும்

எனையூழி = காலம் உள்ளளவும்

ஏக சிந்தையனாய் = ஒரே நினைவாய்

ஏச்சு = பழிப்பு

ஏசறுகை = துக்கப்படுதல்

ஏடி = தோழி

ஏண் = எல்லை

ஏடு = சூக்கும சரீரம்

ஏடு = புத்தகங்கள்

ஏண் = நிலை, வலிமை

ஏணி = ஏறு கருவி

ஏத்துதல் = புகழ்தல்

ஏதம் = குற்றம், துன்பம்

ஏதலன் = பகைவன்

ஏதிலர் = பகைவர்

ஏந்தல் = தேங்கல், தாங்குதல்

ஏமத்தூடி = நடுராத்திரியில் ஊடி

ஏமப்பட்டாளோ = காவலிடப்பட்டாளோ

ஏமாற்றம் = துன்பம்

ஏய்த்த ல் = ஒத்தல்

ஏயான் = இரப்புக்குத்தகாதவன்

ஏர் = அழகு, ஒப்பு

ஏர்விலா = தகுதியில்லாத

ஏலம் = வாசனை

ஏலும் = ஏற்கும்

ஏவல்ல = எய்யவல்ல

ஏவலம் = அம்பின் திறமை

ஏழ் = எழு

ஏழ்ச்சி = விரிதல்

ஏழ்படிகால் = ஏழுதலைமுறை

ஏழ்மைப்பிறப்பு = ஏழுபிறப்பு

ஏழளவும் = ஏழுதலைமுறையாக

ஏழிசை = தாரம், உழை, குரல், இளி, துத்தம், விளரி, கைக்கிளை

ஏழுதல் = பிரகாசித்தல்

ஏழுமால்வரை = ஏழுகுல பர்வதங்கள், கைலை, இமயம், மந்தரம், விந்தியம், நிஷதம், ஏமகூடம், நீலகிரி என்பன

ஏழுலகும் தாள்வரையும் = ஏழுத்வீபங்களும் பக்கத்திலுள்ள சிறுமலைகளையுடைய பெரிய மலைகளும் ஏழுத்வீபங்களாவன நாவலந்தீவு, இறலித்தீவு, இலவந்தீவு, கிரவுஞ்சத்தீவு, குசைத்தீவு, தேக்கந்தீவு, புட்கரத்தீவு

ஏழுழியாய் = ஏழு கற்பங்களாகி

ஏழெழு பிறப்பு = ஏழு பிறப்புக்களிலும், ஏழுவகைப் பிறப்புக்கள் ( தேவர், மனிதர், மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்)

ஏழை = அறிவில்லாதவன்

ஏற்பன = தக்கன

ஏற்றான் = சிவபெருமான், எருதையுடையவன்

ஏற்றை = தலைவனை

ஏறக்கொலோ = ஆவேசித்தானாகக்கூடுமோ

ஏறு = ஆண்சிங்கம்

ஏறேழுடனே = ஏழு காளைகளை ஒரு க்ஷணநேரத்தில்

ஏறேறி = சிவபெருமான்

ஏன்றேன் = பொருந்தினேன்

ஏனம் = பன்றி

ஏனமுழுசாலில் தினைகள் = காட்டுப்பன்றிகள் நன்கு உழுத சால்களிலே புதிய தினைகளை விதைத்த

ஏனாகி = பன்றியாகி

ஏனொருவனாய் = ஏனம் ஒருவனாய் (எதுகை)

ஏனோர் = மற்றையோர்

ஐ = கோழை

ஐங்கணாணவில்லி = மன்மதன்

ஐதுநொய்து = மெல்லிது

ஐந்தழல் = பஞ்சாக்கினி, உதராக்கினி, சூரியதாபாக்கினி, தவாக்கினி, நிதாககாலாக்கினி, இரவிகாந்தாக்கினி

ஐந்து நோய் = ஐந்து விஷயங்களாகிய நோய், சப்தாதிகளாகிற நோய்

ஐம்படை = பஞ்சாயுதமாகிய அணி

ஐம்பால் = ஐந்துவகையாக முடிக்கும் கூந்தல்

ஐம்புலன் = பஞ்சேந்திரியங்கட்கு உரிய ஐவகை உணர்ச்சிகள்

ஐம்பூதம் = பிருதிவி, அப்பு, வாயு, தேயு, ஆகாயம்

ஐயம் = தியாகம், உபாதானம் இடுதல்

ஐயறிவும் கொண்டானுக்கு = ஐம்பொறி ஞானம்

ஐவர் = பஞ்சேந்திரியங்கள்

ஐவர்குமைக்கும் சிற்றின்பம் = பஞ்சேந்திரியங்களும் பீடிக்கும்படியான சாரமற்ற விஷயங்கள்

ஐவரால் குமைத்தீற்றி = நலிவுண்ணும்படிபண்ணி

ஒக்கலித்திட்டு = நடைபழகி

ஒக்கலை = மருங்கு

ஒசித்தல் = ஒடித்தல்

ஓசிதல் = தளர்ச்சியடைதல், முறிதல்

ஓட்டார் = பழிப்பார், சம்மதியார்

ஒட்டி = இசைந்து, பொருந்தி

ஓட்டுகை = இசைகை

ஒட்டுவனோ = இசைவேனோ

ஒண்ணுதல் = பிரகாசமான நெற்றியையுடைய பெண்

ஒத்து = அணிவகை

ஒருக்கருத்து = ஒருமைப்படப்பிடித்து

ஒருக்கா = அடக்கமாட்டாமல்

ஒருங்கப்பிடித்து = ஒருமிக்கப்பிடித்து

ஒருங்கிற்று = சேர்ந்தது

ஒரு தாரா = ஒரு மாலையாக

ஒரு நான்று = ஒரு நாள், ஒருகால்

ஒருப்படுத்த = ஒருமைப்பாட்டோடே சமைத்த

ஒருபாடு = ஒருபக்கம்

ஒருவன் என்று ஏத்த நின்ற = ஒப்பற்ற கடவுள் என்று அடியார்கள் துதிக்கும்படி நின்ற

ஒல்குதல் = நாணங்கொண்டு கூசுதல்

ஒல்லை = விரைவு

ஒலிகள் = பாடல்க ள்

ஒலி ஐந்துமைந்தும் = திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பத்துப் பாசுரங்களும்

ஒலிசெய்த = அருளிச்செய்த

ஒலிமாலை = அருளிச் செய்த பாமாலை

ஒளிவட்டம் = கண்ணாடி

ஒற்கம் = ஒடுக்கம்

ஒற்றைப்பிறை = ஒரு கலையையுடைய சந்திரன்

ஒன்றிரண்டு கண்ணினான் = மூன்று கண்களையுடைய சிவபெருமான்

ஒன்று இடக்கிலேனொன்றட்ட கில்லேன் = பிடிசோற்றை இடேன் ஒருமிடறு தண்ணீரை வார்க்க மாட்டேன்

ஒஒ உலகினதியல்வே = ஹாஹா என்ன ஆச்சரியம் உலகினது தன்மை

ஒகெடுவினையேன் = மகாபாபி

ஒக்குதல் = உயர்த்துதல்

ஒசலித்தல் = அசைதல்

ஒசனையான் = கும்பகர்ணன் (கும்பகர்ணனுடைய புருவங்களின் இடைவெளி ஒரு யோசனை உள்ளது பற்றி)

ஒட்ட ருதல் = ஓடிவருதல்

ஒட்டைமாடம் = நிலையற்ற உடல்

ஒணவிழவு = திருவோணத் திருநாள்

ஒத்து = வேதம்

ஒத்தொலி = மறையொலி

ஓதம் = குளிர்ச்சி, அலை,

ஓதி = கூந்தல்

ஓர்ப்பால் = ஆராய்ந்தறிகையால்

ஓராமை = ஆராய்ந்தறியாமை சிறிய

ஓரீற்றுப்பிடி = ஒரு குட்டியை ஈன்றபெண்யானை

ஓலமிடல் = அபயக்குரலிடுதல்

ஓவி = சித்திரம்

ஓவுதல் = ஒழிதல்

ஔித்துகிற்படலம் = ஒழுங்கு பெற்ற கொடிச்சீலை

கங்கு = எல்லை, இராத்திரி

கங்குல் = இரவு

கச்சங்கம் = பிரதிக்ஞை, வியவஸ்தை

கச்சி = காஞ்சிபுரம்

கசிகை = ஈடுபாடு

கஞ்சு = கஞ்சன்

கஞ்சை = கஞ்சனை

கட்கிலீ = கண்ணுக்குக் காணவொண்ணாதவன்

கட்டம் = கஷ்டம்

கட்டழித்தல் = நிலை குலைத்தல்

கட்டி = வெல்லம்

கட்டு = அரண்

கட்டுரை = நற்செயல்

கட்டேறி = தெய்வ ஆவேசம் கொண்டு

கடம் = காடு, மதநீர், பாபபலம், அவசியம் செயற்பாலது

கடமை = கடன்

கடலேழ் = உவர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு

கடவன் = கடமைப்பட்டவன், எசமானன்

கடாகின்றூ = கடாவுக இன்று

கடாய் = பாதுகாக்கப் பெற்ற

கடாயன = உபயோகிக்கத்தக்கன

கடாரம் = பெரிய பாத்திரம்

கடாவுதல் = செலுத்தல்

கடி = காவல், மதிள், வாசனை

கடிகாவையிறுத்து = அசோகசவனத்தை அழித்து

கடிகைத்தடங்குன்று = சோளசிங்கபுரம்

கடிப்பு = ஒருகாதணி

கடிறு = களிறு ளகரத்துக்கு டகரம் வந்துள்ளது

கடுவன் = ஆண்குரங்கு

கடுவினை = தீவினை

கடைகயிறு = தயிர் கடைகின்ற கயிறு

கடைத்தலை = திருவாசல்

கடையா = மூங்கிற்குழாய்

கண் = இடம்

கண்களுக்கற்றுத்தீர்ந்து = புறம்பேபற்றற்று அனந்யர்ஹமாயிருக்கிற

கண்டகர் = முன்போலக் கொடிய ராக்ஷஸர்

கண்டம் = தேவப் பிரயாகை

கண்டல் = தாழை

கண்டாய் = கிடாய்

கண்டீர் = கண்டு, கேட்டு

கண்ணறாய் = தயவில்லாதவனே

கண்ணாலங் கோடித்து = கலியாணம்

கண்ணிக்கயிறு = முடிகளையுடையகயிறு

கண்ணியார் குறுங்கயிற்றால் = முடிகளார்ந்த குறுங்கயிறு

கண்ணுறக்கம் = நித்திரை

கண்படை = தூங்குதல்

கண் புதைத்தல் = மறைத்தல்

கண்முகப்பே = கண்ணுக்கெதிரில்

கண்மூன்றுத்தானும் = சிவன்

கணகணப்ப = கண கண என்று ஒலிப்ப

கணவலரும் = அலரியும்

கணி = சோதிடன்

கணை நாண் = அம்புவிடுங்கயிறு

கணைபாரித்து = அம்புகளைப் பிரயோகித்து

கத்தக்கதித்து = மிகவும் கொழுத்து

கத்திரபந்து = க்ஷத்ரபந்து, க்ஷத்திரியர்களுள் அதமன்

கத்திரியர் = க்ஷத்திரியர்

கதவி = கோபித்த

கதலி = வாழை

கதிரவன் =சூரியன்

கதுவப்படுதல் = கவ்வப்படுதல்

கதுவாய் = புண்பட்டவாய்

கதுவாய்ப்படுதல் = வடுப்படுதல், வெறுந்தரையாம்படி

கந்தாரம் = தேவ காந்தாரி ராகம்

கந்து = கந்தம்

கப்பம் தவிர்க்கும் கலியே = நடுக்கத்தைப் போக்கும் கண்ணனே

கப்பு = தோள், காம்பிலடியிலுண்டானகிளை

கபாலநன்மோக்கம் = பிரமகபாவத்தையொழித்தல்

கபாலி = சிவன், துர்க்கை

கபிலை = பசு, படிமைக்கலம்

கபோதம் = புறா, கொடுங்கு

கம்பம் = நடுக்கம்

கம்பக் கபாலி = நடுக்கத்தைக் கொடுக்கவல்ல துர்க்கை ருத்ரனுமாம்

கமுகு = பாக்குமரம்

கமுகம் = பாக்கு மரம்

கமை = (க்ஷமை) = பொறுமை

கயம் = தடாகம், க்ஷயரோகம், யானை

கயல் = கயல்மீ ன் = பெரிய

கயவர் = மூடர்

கயிறு மாலை = கயிற்றில் தொடுத்த பூமாலை

கரண்டம் = நீர்க்காக்கை

கரணப்பல்படை = போர்க்கு உபகரணமாகிய பல்படை

கரத்தல் = ஒளித்தல்

கரம் = கை, உறுதி

கரம் விற்கிலும் = நெல்விற்கும்படியான துர்பிக்ஷகாலத்திலும்

கரா = கராம், முதலை

கரிமுகத்தான் = யானை முகமுடைய விநாயகன்

கரிய நாழிகை = அந்திக்காலம்

கரு = கல் பிரதிமை, கர்ப்ப ம்

கருக்காய் = பிஞ்சு, கருக்காய் கடிப்பவர்

கருநாயிறு = கருமை நிறமுடைய சூரிய மண்டலம்

கருநெல் = கருவடைந்த நெற்பயிர்

கருப்புச் சிலை = கரும்பு வில்

கருமாணிக்கம் = கரிய மாணிக்கம் போன்ற வடிவுடையவன்

கருமுகை = இருவாட்சி, சிறுசண்பகமுமாம்

கருமேந்திரியம் ஐந்து = உபஸ்தம், பாணி, பாதம், பாயுரு, வாக்கு

கருவரங்கத்துள் = கர்ப்பஸ்தானத்தில்

கருவிருந்தநாள் = கர்ப்பத்திலிருந்தநாள்

கருவிளை மலர்காள் = காக்கணம் பூக்களே

கருளக்கொடி = கருடக்கொடி

கரை = ஓசை

கல் (ஏவல்) = கற்றுக்கொள்

கல்கி = குதிரை முகத்துடன் அவதரிக்கும்

கல்வி = சாதுர்யம்

கல்விச்சிலை = தனுர்வேதம்

கலக்கழிய = கட்டுக்குலைய

கலவர் = மரக்கலத்தினுள்ளேயிருப்பவர்

கலவி = கலத்தல்

கலவிருக்கை = கொலுவிருத்தல்

கலாய் = கலந்து

கவி = காலதோஷம், கவி புருஷன்

கலிங்கம் = ஆடை

கலுழி = கலங்கல், வெள்ளம்

கலை = ஆடை, சாஸ்திரம், அம்சம், பக்கம்

கலைப்பாகி = ஆண்மானை வாகனமாகவுடைய துர்க்கை

கவ்வை = பழிச்சொல்

கவண் = கல்லெறி கயிறு

கவந்தம் = தலையற்ற உடல்

கவரி செய்வார் = சாமரை வீசுதல் முதலான கைங்கரிங்களைச் செய்வார்கள்

கவரிப் பிணா = சாமரம் வீசுகின்ற பெண்கள்

கவாடம் = கதவு

கவி = குரங்கு

கவிஞர் = வித்துவான்கள்

கவிதை = பாட்டு

கவின் = அழகு

கவுள் = கன்னம்

கவை = பிளவு

கவையின் மனமின்றி = வேறொன்றிற்புகும் மனமின்றி

கடிகண்டு = தீம்பு இது "கழகு" எனவும் வழங்கு

கழகம் = கூட்டம்

கழல் = விளையாட்டுக் கருவி

கழல்கமவம் = திருவடித்தாமரை

கழல்வளை = கை வளைக்கும் கழல்வளையென்று இடுகுறிப்பெயர் கழறல் = கிலேசப்பட்டுச் சொல்லுகை

கழறாநிற்றிர் = நியமியாநின்றீர்

கழிகோல் = வீசுகோல், கன்றின் வாயில் கட்டும் கொறுக்கோல்

கழி நேர்மை = கழிவையுடைத்தான நுண்மை

கழுது = பேய், பூதனை

கழை = மூங்கில்

கள்கின்ற = திருடுகின்ற

கள்வங்களே = கிருத்திரிமவியாபாரங்கள்

களகம் = அன்னம், சாந்து, நெற்கதிர்

களகமதின் = சாந்தையுடையமதிள்

களவம் = களா, யானைக்கன்று

களவேழ் = களவு பிரகாசிக்கும்படி

களனிழைத்து = தேவாந்திர சன்னிதானம்

களிதாகிய சிந்தையனாய் = மிகுகளிப்பையுடைய

களைகண் = ரக்ஷகர், பற்றுக்கோடு

கற்பம் = வேதாங்கங்களில் ஒன்று

கற்புவானிடறி = பெண்மைக்குணம்

கற்பு = அறிவுடைமை கற்றா = கன்றையுடைய பசு

கற்றினம் = கன்றுகளின் கூட்டம்

கறங்குதல் = ஒலித்தல்

கறவு = கப்பம்

கறவை = கறக்கும்பசு

கறி = மிளகு

கறு = கோபம்

கன்னல் = கருப்பஞ்சாறு

கன்னார்மதிள் = தொழில் நிரம்பிய மதில்

கன்னி = இளம்பெண், அழியாமை

கனகக்கடிப்பு = பொன்னால் செய்த ஒரு காதணி

கனங்குழை = கனமான குண்டலம்

கா = சோலை

காகுத்தன் = இராமன், சூரிய குலத்தரசன்

காசையாடை = காஷாய ஆடை

காட்சி = தோற்றம்

காண் = அழகு

காண்கின்றனகளும் = காணப்படுகின்ற செய்கைகளும்

காண்டவம் = காண்டவவனம்

காணக்கொடாள் = காண இடம் தருகின்றிலள்

காத்தனே = காத்தவனே

காதணி = மாங்கல்யம் போல்வது

காதல் = அன்பு

காதலன் = கணவன்

காதுகள் தூரும் = குத்தப்பட்ட காதுகள் தூர்த்துவிடும்

காது செய்வான் = செவி செய்பவன்

காந்தப்பர் = கந்தருவர்கள்

காப்பு = பாதுகாவல், ரட்சை

காபாலி = பிரமகபாலத்தைக் கையிலேந்திய சிவன்

காம்பற = தொற்றற, சம்பந்தமற

காம்பு = சிறுகாம்பன்சேலை

காமம் = அபீஷ்டம், (விருப்பம்)

காமதேவா = மன்மதா,

காமரங்களிசை பாடும் = காமரம் என்னும் இசையைப் பாடுகின்ற

காமரானவாறும் = ஸ்திரீகள் தன்னை விரும்பியிருந்த படியையும்

காய்தல் = கோபித்தல்

காய = காயா, குறுக்கல் விகாரம்

கார் = சினை, பெருமை

கார்க்கண்டன் = சிவன்

கார்க்கவி = அஞ்ஞானமாகிய தோஷம்

கார்த்தல் = அரும்புதல்

கார்த்தனவே = கருவடைந்து அரும்பின

கார்த்திகையான் = சுப்பிரமணியன்

காரிகை = அழகுடைய பெண்

காரேழ் = சம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலாவர்த்தம், துரோணம், காளமுகி, நீலவர்ணம்

கால் = காற்று, சக்கரம், நுனி

காலசக்கரம் = காலத்தை நடத்துகிற

காலம் பெற = தாமதமாகாதபடி

காலம் பெறச் சிந்தித்து = காலந்தாழ்த்தாமல் உடனேயே நினைத்து

காலன் = யமன்

காலாழும் = கால் அழுந்தும்

காலி = பசுக்கூட்ட ம்

காவலன் = அரசன்

காவி = நீலோற்பலம்

காவு = விளையாட்டுச்சோலை

காளம் = வாத்திய விசேடம், கறுப்பு

காறை = கழுத்திலணியும் ஆபரணம்

கான் = காடு, வாசனை

கானதர் = காட்டுவழி

கானவர் = காட்டில் திரியும் வேடர்

கிஞ்சுகம் = கிளி

கிடங்கு = அகழ்

கிதயுகம் = கிருதயுகம்

கிதி = கிரியை

கிரிசை = கிரியா

கில்லேன் = மாட்டேன்

கிழி = பணமுடிப்பு

கிலிர்தல் = விளங்குதல்

கிளரிக்கிளரி = வருந்தி எடுத்தெடுத்துக் கூறி

கிற்கின்றியேன் = சக்தியற்றவன்

கிற்பன்கில்வேன் = வல்வேன் மாட்டேன்

கிற்றி = வல்லை

கிறி = தந்திரம்

கிறிக்கொண்டு = உபாயத்தைக் கொண்டு

கிறியம்மான் = நல்விரகையுடைய சர்வேசுவரன்

கின்னரம் = தேவ வாத்தியம்

கீசுகீசு = ஓர் ஒலிக்குறிப்பு, ஒரு சார் பறவையொலி

கீர்த்தித்த = துதித்த

கீழ்க்க ன்று = தம்பி

கீழ்து பிளந்த = கீழதாம்படி

கீழ்மேல் ஏழெழு பிறப்பும் = கீழும் மேலுமாகிய ஏழெழு பிறப்புக்களிலும்

கீழையகம் = கீழைவீடு

குக்கர் = சண்டாளரிற்றண்ணணியர்

குக்கூடல் = முட்டாக்கு

குஞ்சி = ஆண்தலை மயிர்

குட்ட ம் = மடு

குட்டன் = குமாரன்

குட்டேற்றை = சேங்கன்றை

குடங்கலந்தாடி = பலகுடங்களைச் சேர்த்து எடுத்தாடி

குடங்கால் = மடி, முழங்கால்

குடங்கை = உள்ளங்கை

குடதிசை = மேற்குத்திசை

குடமாட்டும் = குடக்கூத்து

குடமாடி = குடக்கூத்தாடி

குடமாடிய கூத்தனை = குடக்கூத்தாடினவன்

குடமாடுதடமார்வர் = குடக்கூத்தாடினவனும் மார்பையுடையவனும் ஆகிய பெருமாள், குடமிரண்டு ஏந்தியாடுமது

குடுமி = மலையுச்சி

குடைந்து = அமிழ்ந்து

குடையேற = குடைமுதலாக

குண்ட ர் = நீசர், ஆழம், தாழ்ச்சி, நீசம்

குண்டிகை = கமண்டலம்

குண்டு = ஆழம்

குணதிசை = கிழக்குத்திக்கு

குணாலமாடுதல் = குணாலைக்கூத்து, தலைகீழாக ஆடுவதொரு கூத்து

குணில் = குறுந்தடி

குணங்குநாறி = முடைநாற்றம்நாறி

குத்தாலொக்கும் = குத்தினாற் போலேயிராநின்றது

குதற்று = மிடுக்குக்கள்

குதிரியாய் = அடங்காதவள்

குதுகலிப்ப = ஆசைப்பட

குதைகை = தடுமாறுகை

குதையும் வினை = அலையப்பண்ணுகிற துஷ்கருமம்

குந்தி = குந்திக்கொண்டு

குப்பாயம் = சட்டை

குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை = குப்பையைக் கிளறினாற்போலத் தோஷமே தோன்றும்படியான செல்வமுடையாரை

கும்மாயம் = புழுக்கிய பச்சைப் பயறோடு சருக்கரை முதலியன கூட்டி ஆக்கப்படுவதொரு சிற்றுண்டி

குமரதண்டம் = சேனாசமூகம்

குமரி = கன்னி

குமுதம் = அல்லி

குமுறுதல் = வாய்விட்டுச் சொல்லமாட்டாது உள்ளே முறுகுதல்
குமைக்கும் = நலிகிற, வருந்தும்

குயிற்பைதல்காள் = குயில்பிள்ளைகளே

குரம்பை = குடிசை

குரவம் = ஒருவாசனை மரம்

குரவை பிணைந்து = குரவைக் கூத்தாடி

குராப்போது = மணம்மிக்க மலர்

குருக்கள்குல மதலை = குருவமிசத்துப் பிறந்து அருச்சனன்

குருடன் = திருதராட்டிரன்

குருந்தம் = அசுரன் ஆவேசித்திருந்த ஒரு குருந்தமரம்

குருத்தமொசித்து = குருந்த மரத்தை முறித்து

குருத்திடைக் கூறைபணியாய் = குருந்தமரத்தின் மேலுள்ள

ஆடைகளை தந்தருள்வாய்

குருமணி = சிறந்த இரத்தினம்

குலாகின்ற = வளைகிற

குலை = கரை

குழகன் = எல்லாரோடுங்கலந்திருப்பவன்

குழகி = விளையாடி

குழகு = அழகு

குழகேலே = விளையாடாதே

குழமணன் கொண்டு = மரப்பாவை கொண்டு

குழமணி தூரமே = குணாலைக்கூத்துப் போலே தோற்றார், தோல்விக்கீடாக ஆடுவதொரு கூத்து

குழல் = கூந்தல்

குழல் முழஞ்சுகளின் ஊருகுமிழ்த்து = வேய்ங்குழலினுடைய துளைகளிலே நீர்க்குமிழி வடிவாய்க்கிளர்ந்து

குழாவரிவண்டு = குழாமாகியவரி வண்டு

குழிய = குழவிய, கூடிய

குள்ளக்குளிர = மிகக் குளிர்ந்திருத்தல்

குளப்பு கூறுகொள்ளப்பட்டு = துகைத்து மிதித்த இடத்திலே மிதிக்கப்பட்டு

குறந்து = சிக்குவிடுத்து

குறளை = பொய்

குறிக்கொள்ளே = திருவுளம் பற்றுக

குறிஞ்சியிசை தவருமாலோ = குறிஞ்சிப் பண்துளைக்கும்

குறுங்குடி = இத்திருப்பதி திருநெல்வேலி இரயில் சந்திப்பிலிருந்து 27 கல் தொலைவில் உள்ளது குறுகியவனான வாமனனது திருத்தலமாதலால்குறுங்குடி எனப்பெயர் பெற்றுள்ளது

குறுந்தலை = நீசர்வகுப்பில் முதல் நின்ற

குறையிரந்த = குறைவாளனாயிருந்த

குன்றெயிற்றென்னவன் = மலை போன்ற மதில்களையுடைய நாட்டுக்கரசன்

கூகிற்றியாகில் = கூவவல்லையானால்

கூகின்றது = கூவுகின்றது

கூசம் = கூச்சம்

கூடலர் = பகைவா வேள்விக் குடியும் துருத்தியும்

கூடலூர் = அப்பக்குடத்தான் சந்நதி

கூடார் = பகைவர்

கூத்தன் = சிவன்

கூதல் = குளிர்

கூதை = மூளி (கூதை செய்து)

கூந்தல் = கேசி (ஓரசுரன்)

கூம்பு = பாய்மரத்தின் நுனி

கூர்வேல் = கூர்மையான வேலாயுதம்

கூயே கொள் = அழைத்துக் கொள்

கூவிளை = வில்வம்

கூழ்ப்பு = சந்தேகம்

கூழேன்மின் = சந்தேகப்படாதீர்

கூழை = கூந்தல்

கூழைப்பார்வை = கள்ளப்பார்வை

கூழைமைசெய்கை = அவரவர்க்குத் தக்கபடி பரிமாறுகை

கூறை = ஆடை

கூறையுடை = பரியட்டத்தின் உடுப்பு

கேசம் = தலைமயிர்

கேட்டேயும் = கேட்கும்போதே, கேட்டாலும்

கேடகம் = ஆயுதத்தைத் தடுப்பதற்குக் கையில் கொள்ளும்

கேயத்தீங்குழலோதி = பாட்டுடன் மதுரமாகிய வேய்குழலையூதி
கேவலமன்று = சாமானியமன்று

கைசெய்தல் = ஒழுங்குபடுத்தல்

கைத்தலத்தா = அழகிய கையையுடையவனே

கைத்தலம் = பாணிக்கிரஹணம்

கைத்தால் = நெஞ்சம் கசந்து போனால்

கைதவம் = கபடம்

கைதைத் தோடாரும் = தாழை மடல்களில் பொருந்தியுள்ள

கைந்நாகம் = கைம்மா, துதிக்கையையுடைய யானை

கைப்பற்றுதல் = பாணிக்கிரஹணம்

கையறைபோழ்து = கை வகுத்துப் பொருத போழ்து

கைவலம் = கைம்முதல்,

கொங்கு = வாசனை

கொட்டாய் பல்விக்குட்டி = (தக்ஷிணகௌளி) கொட்டாய் ஒலிசெய் கொட்டை = பஞ்சுச்சுருள்

கொடிக்கோழி கொண்டான் = சுப்பிரமணியன்

கொடிமூக்கு = நீண்டமூக்கு

கொடுவுலகம் = கொடியதாகிய உலகத்தை

கொண்டல் = காளமேகம்

கொண்டற்கு = கொண்டதற்கு

கொத்துத் தலைவன் = கூட்டங்களுக்குத் தலைவனாகிய

கொந்தக்குழல் = நெறிப்பையுடைய கூந்தல்

கொந்து = கொத்து

கொந்தளம் = சிறுகிடுகை

கொம்பராவு நுண்ணேரிடை = கொம்பிலும்

கொம்பினன்ன இடை = வஞ்சிக்கொம்போடு ஒத்த நுண்ணிய இடை கொம்மைப்புயம் = பெரிய புயம்

கொயல்வாய்மலர் = பறிக்கப்படுதல் பொருந்தினபூ

கொல்லியம்பாவை = கொல்லி மலையிலுள்ள அழகிய பதுமை

கொல்லைமை = வரம்பழிந்த செயல்

கொழுந்து = தலைவன்

கொழுந்தை = சிரோபூதன்

கொள்ளி மேலெறும்பு போல = கொள்ளிக் கட்டையில் அகப்பட்டுக் கொண்ட எறும்பு போல

கொன்றை = கொன்றை மரங்கள்

கொன்றைச் சடையன் = சிவன்

கோது உகட்டு = அடைவுகேடு

கோகுலம் = பசுக்கூட்டம்

கோசரம் = விஷயமாதல்

கோட்டம் = கோடுதல், அநீதி

கோடல் = காந்தள்

கோடாலம் = பிறைபோல் வளைந்த ஆரம்; ஆரம் ஆலமென்றாயிற்று

கோடி = புத்தாடை

கோடித்து = பாரிப்புக்களைப்பண்ணி

கோடு = தந்தம், கரை

கோணை = பிரயாசம், மிடுக்குக்கள்

கோத்துக்குரவை பிணைந்த = ராசக் கிரீடை செய்தருளின

கோதா = கௌதுகலத்தைச் செய்பவனே

கோது = சாரமற்றது

கோதுகுலமுடைக்குட்டனே = எல்லாராலும் விரும்பத்தக்க குணங்களையுடையவனே

கோமளம் = பேரழகு, மிருதுவான தன்மை

கோமிறைசெய்து = அரசன் செய்யக்கடவ மிடுக்குகள்

கோயில் = ஸ்ரீரங்கம்

கோயின்மை = அநீதி, ஆராய்ச்சியில்லாத செயல்

கோரம்பு = தீம்பு

கோலாடி = ஆஞ்ஞை செல்லுமிடம்

கோவலப் பட்டம் கவித்து = இடைக்குலத்துத் தலைவி என்று பட்டம் கட்டி

கோவலர் = ஶ்ரீநந்தகோபர்

கோவலூர் = பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் மூவரும் பகவத் ஸ்வரூபத்தை நன்கறிந்து அநுபவித்த திருப்பதி

கோவாய் = நிர்வாகர்களாய்

கோவி நாயகன் = கோபீஜன வல்லபன்

கோவைமணாட்டி நீ = கோவைக் கொடியாகிய மங்கையே

கோழம்பம் = குழப்பம், கலக்கம்

கோழி = உறையூர்

கோள் = சிறை, கிரகம், குற்றம், துன்பம், கொள்கை

கோளூர் = இத்திருப்பதி ஆழ்வார் திருநகரியிலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது நவநிதிகள் இங்கே ஒளிந்து கொண்டிருக்கின்றன என்று அதர்மம் குபேரனுக்குக் கோள் சொல்லிய இடமாதல் பற்றிக் கோளூர் என்று பெயர் வந்தது என்பர் மதுரகவி ஆழ்வார் அவதரித்த தலம்

கோறம்பு = திலகம், குறம்பம் என்ற ஆபரணம்

கோனேரி = திருவேங்கட மலைமேல் உள்ள புஷ்கரிணி

கௌத்துவம் = மணி

சக்கரச் செல்வன் = திருவாழியாலே அழகுபெற்றவன்

சகடம் = வண்டி

சண்டம் = உக்கிரம்

சண்ணம் = ஆண்குறி

சதிரா = அத்தாட்சியாயிருக்கும் தன்மை

சதிர்த்தேன் = சதிரையுடையேன்

சதிர்வு = பிரமபுரம்

சாடுதல் = தள்ளி அழித்தல், அடித்தல்

சாத்து = சமூகம், தீர்த்த யாத்திரைக்குச் செல்வோர் கூட்டம்

சாதித்தல் = கொல்லுதல்

சாமம் = சாமத்தினிறங்கொண்ட தாடாளன்

சாமத்திருமேனி = சியாமளமான சரீரம்

சாமமாமேனியன் = நீலநிறத்தையுடைய சிறந்த சரீரத்தையுடையவன்

சாமரை = கவரிமானின் மயிரால் அமைந்த அரச சின்னம் சாமவேதகீதன் = சாமவேதத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டவன்

சாமவேதியன் = சாமவேதத்தை முதலில் அத்தியயனம் செய்தற்கு உரிமை பெற்றவன்

சாமாறு பணி கண்டாய் = சரீர விச்லேஷத்தைப் பெறும்படி பார்த்தருள வேணும்

சாமியப்பன் = சிவன்

சாய் = ஆச்சரியப்படும்படியான அழகு

சாயை = தேஜஸ் ஒப்பு

சார்கொடான் = அணுக ஒட்டான்

சார்ங்க முதைத்த சரமழை = வில்லால் விடப்பட்ட அம்பு மழை

சாரிகைப்புள்ளர் = விரைந்த நடையையுடைய

சாலகம் = பலகணி பெ

சாலேகம் = சன்னல்

சாழலே = தோழியே

சாழல் = மகளிர் விளையாட்டில் ஒன்று

சாற்றிச் சொன்னேன் = வற்புறுத்திச் சொல்லுகிறேன்

சாறுபட = உற்சவமுண்டாக, (விழவுபட)

சிக்கென = உறுதியாக

சிங்கவேள் குன்றம் = அஹோபிலம்

சிங்காமை = சங்கோசியாமல்

சிசுபாலன் = வசுதேவனுக்கு உடன்பிறந்தவளும் அதனால் கண்ணனுக்கு அத்தையுமான சுருதசிரவை என்பவளுடைய மகன்

சிசுபாலன் = தலையைச்சிரைத்திட்டது

சிணுங்கி = முக்கால முதல்

சித்தர் = அஷ்டமாசித்தியடைந்தோர்

சித்திர குப்தன் = இயமராசனது கணக்கன்

சித்திரகூடப்பொருப்பு = சித்திரகூடமலை

சித்திரகூடம் = இராமன் வனவாச காலத்தில் தங்கியிருந்த ஒரு மலை

சிதகு = கடுஞ்சொல், குற்றம்

சிதைகிய = உடைந்த

சிந்தாமணி = நினைத்த மாத்திரத்தில் விரும்பியவற்றைத் தரக்கூடிய மணி

சிந்துபூமகிழும் திருவேங்கடம் = தூவினமலர்கள் அழகு கெடாதிருக்கப்பெற்ற திருமலை

சிந்துரம் = நெற்றியிலணியும் பொடி

சிமயம் = சிகரம்

சிரமம் தீர்தல் = இளைப்பாறப்பெறுதல்

சிரமப்பட்டோம் = கஷ்டப்பட்டுச் செய்தோம்

சிரீதரன் = திருமால்

சிரைத்து = அழித்து

சில்லி = சில்லெனல், சிள்வீடு

சில்லென்றழையேன்மின் = சிலுகிடாதே அழையுங்கோள்

சில்லென்றொல்லறாத = சில்லென்ற ஓசை மாறாத

சில்லை = சிலுகுசெய்தல்

சிலம்பியலாறு = சிலம்பு என்று கூறப்படுவது

சிலாதலம் = கற்பாறை

சிலிங்காரம் = சிருங்காரம்

சிலுகு = சண்டை, கூச்சல்

சிலுப்பி = கையால் சிலிப்பித்து

சிலும்ப = முழங்க

சிலை = ஒளி

சிவசாபம் தவிர்த்தது = பிரமனால் சிவனுக்கு ஏற்பட்ட பிரம்மஹத்தி சாபத்தைப் போக்கினது

சிவப்பட்டார் = சைவர்

சிவபெருமான் பங்கத்தாய் = சிவபிரானை வலது பக்கத்திலுடையவனே

சிவளிகைக்கச்சு = கட்டுங்கச்சு, பொன் எழுதினகச்சு

சிவன் ஆலநீழல் அறம்பகர்ந்தது = ஆலமரத்தின் நிழலிலே அகத்தியர், புலத்தியர் தக்ஷர், மார்க்கண்டேயர் என்கிற நால்வருக்கு அறம் உரைத்தது முதல்

சிற்ற = ஆயாசப்பட

சிற்றங்சிறுகாலே = குளிர்போதில்

சிற்றவை = சிறிய தாயார்

சிற்றாடை = சிறிய ஆடை

சிற்றாதே = அசையாமல்

சிற்றுதல் = ஆயாசப்படல்

சிறுக்கண் = சிறுபிள்ளை

சிறுக்கன்று = இளங்கன்று

சிறுக்குட்டன் = சிறுபிள்ளை

சிறுக்கை = சிறியகை

சிறுகால் நெறி = சிற்றடிவழி

சிறுகாலே = விடியற்காலையில்

சிறுச்சண்ணம் = சிறிய ஆண்குறி

சிறுச் சிறிது = கொஞ்சம் கொஞ்சமாக

சிறுச் சேவகம் = பாலபராக்கிரமம்

சிறுத்தாம்பு = சிறிய கயிறு

சிறுத்தேவி = பருவம் நிரம்பாதவள்

சிறுதூதை = மண் முதலியவற்றால் இயன்ற சிறுகலம்

சிறு தொண்டீர் = நீசர்களே

சிறுநோன்பியர் = அற்பவிரதங்களைக் கொண்டவர்

சிறுப்பத்திரம் = சிறியவாள்

சிறுபுறம் பேசுதல் = அற்பமான குற்றங்களை மறைவில் சொல்லுதல்

சிறு பேரழைத்தல் = சிறுபேர் நாராயண நாமம்

சிறுமனிசர் = அற்ப மனிதர்

சிறுமானிடவர் = நீச மனிதர்கள்

சிறு வீடு = சிறுகாலையில் விடுதல்

சிறை = க்ஷயம்

சின்மொழி = சிலபேச்சு

சின்ன நறுந்தாது = சிறிய மணமுள்ள தாதுக்கள்

சின்ன நறும்பூந் திகழ்வண்ணனன் = சிறிய மணமிக்க பூப்போல் விளங்குகின்ற நிறத்தையுடையவன்

சின்ன மலர்க்குழலும் = துகள்களையுடைய மலர்களை அணிந்த கூந்தலையும்

சீடை = உருண்டை வடிவமுள்ள சிறு பண்ணிகாரவகை

சீதனையே (ஸ்ரீதரனை) = குளிர்ந்த தன்மையுடையவன்

சீதை = உழுபடைச்சால், நிலத்தை ஜனகமகாராசன் யாகத்திற்காக உழும்பொழுது தோன்றியதால் பிராட்டிக்குச் சீதை என்று பெயராயிற்று

சீமாலிகன் = கண்ண னுடைய தோழன்

சீய்க்கை = திருவலகிடுகை

சீயம் = சிங்கம்

சீரரசாண்டு = சிறப்பாக ராச்சியபரிபாலனம் செய்து

சீராம விண்ணகரம் = இத்திருப்பதி சோழநாட்டில் சீகாழியிலிருந்து அரை கல் தொலைவில் உள்ளது

சீலைக்குதம்பை = சீலைத்தக்கை (காதுவளர்தற்பொருட்டு இடுவது)

சுக வெள்ளம் = இன்பக்கடல்

சுகிர்ந்திட்ட = கழித்திட்ட

சுகிர்ந்து = பிளந்து

சுட்டி = ஒரு நெற்றியணி

சுடரடி = தேவராசன் திருவடி

சுண்டாயம் = விளையாட்டு, வஞ்சனை

சுணங்கையெறிந்து = மயிர்கிளர்த்து

சுணம் = சுணங்கு (சுண்ணணம்) முலைமேல் தோன்றும் நிற வேறுபாடு

சுந்தரத்தோளன் = அழகிய தோளையுடையவன்

சுந்தரர் = கந்தருவர்

சுந்தரன் = அழகன்

சும்மெனாதே = மூச்சுவிடாதே

சுமடு = சும்மாடு

சுமந்திரன் = தசரதருக்கு மந்திரியும், சாரதியும் ஆனவர்

சுமாலி = விஷ்ணுவின் சக்கரத்தால் கொல்லப்பட்டவன்

சுரவி = பசு

சுரிகை அணைத்து = உடைவாளைத் தரித்துக்கொண்டு

சுரியேறுசங்கு = சுழித்தலையுடையசங்கு

சுருக்கே = சங்கிரகமாகச் சொல்லலாவது

சுருப்பு = சுரும்பு வண்டு

சுரும்பலற்றும் = வண்டுகள் ரீங்காரம் செய்தல்

சுருள்பங்கி நேத்திரத்தாலணிந்து = சுருண்ட குழல்களைக் கட்டி பீலிக்கண்களாலே அலங்கரித்துக் கொண்டு

சுலாய் = சுற்றி

சுலாவிநிற்றல் = சூழ்ந்து கொண்டு நின்று

சுவடு = அடையாளம்

சுவேதன் = அர்ச்சுனன்

சுழலை = சூழ்வலை

சுழலை = சுழன்று கழன்று வருகிற ஆறு துன்பங்கள் இவ்வுடலைச் சூழ்ந்து கொண்டிருப்பதனால் அவற்றைச்

சுழலாயாக உருவகப்படுத்தினார். சுழலைப் பெரிதுடைத் துச்சோதனன் ஆலோசனையுடைய துரியோதனன், 'சூழலை' என்பதன் குறுக்கல்

விகாரம் சூழல் = ஆலோசித்தல்

சுளகு = முறம்

சுளை கொண்ட பலங்கனி = சுளைகளையுடைய பலாப்பழம்

சுற்றத்தவர் = உறவினர்கள்

சுறவ நற்கொடிகள் = சுறாமீனையுடைய நற்கொடிகள்

சுனை = மலையூற்று

சூடகம் = கைவளை

சூடாமணி = தலையில் அணியும் இரத்தினம்

சூதகம் = தேமாமரம்

சூது = உபாயம், காரணம்

சூர் = பேய், தெய்வப்பெண்

சூர்ப்பணகா = இராவணனுடைய தங்கை

சூலிகை = சூலம்

சூழ்தல் = ஆராய்தல், எண்ணல்

சூழ்போகி = கொல்லும் வகைகளை ஆராய்ந்து

சூழல் = தந்திரம், மணம், வட்ட வடிவமான பூமி

சூழறும் = ஆணையற்ற

சூனியவாதர் = நிரீசுவரவாதிகள்

செக்கஞ் செக = நினைவுகெட

செக்கர் = சிவப்பு

செக = போக

செகில் = சிவப்பு

செங்கண்மால் = திருமால்

செங்கலங்கல் = சிவந்தவெள்ளம்

செங்கழுநீர்வாய் நெகிழ்ந்து = செங்கழுநீர்ப்பூக்கள் மலர

செங்களம் = சிவந்த யுத்த பூமி

செங்கற் பொடிக்கூறை = காவியில் தோய்த்த ஆடை

செங்கீரை = தாய்மார் முதலானோர் பிள்ளைகளைத் தாங்களே அசைத்தாடுவிப்பதொரு நிருத்தவிசேடம்

செங்கோல் வலவன் = சோழன்

செஞ்சோற்றொடு கஞ்சி மருவிப் பிரிந்தவர் = சமணர்

செடியாய வல்வினைகள் = பாபம்

செடியராக்கை = பெருங்காடு நிறைந்த சரீரசம்பந்தத்தை

செண்டன் = பூச்செண்டு

செண்டுகோல் = பந்தடிக்கும் கோல், நுனியில் பூக்கள் வைத்துக்கட்டிய கோல்

செண்டு சிலுப்பி = செண்டைக் கையிற்சுலிப்பித்துக்கொண்டு

செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர் = அந்தணர்

செந்நெறீஇ = செவ்வனே நிறுத்தி

செப்பம் = செவ்வை

செப்பாடு = செம்மையான குணம்

செம்பாடு = செம்மண் தரை

செம்பியன் கோச்செங்கணான் = ஓரரசன் இவன் ஈசற்கு எழில்மாடம் எழுபது செய்தவன்

செம்பினாலியன்ற பாவை = செம்பினால் செய்யப்பட்ட பிரதிமை

செம்பொன் இலங்குவாளி = விளங்குகின்ற பொன்னால் செய்யப்பப்பட்ட அம்பு

செம்மாது = பிராட்டி

செம்மாந்திரே = செவ்வனே

செம்மா பாத பற்பம் = செவ்விய சாமளமான பாதபத்மம்

செம்மாய் நிற்றல் = நேர்மையாய் நிற்றல்

செம்மி = அடைத்து

செய்கிறுதி = செய்கிறாய்

செய்குன்றம் = செல்வமக்கள் விளையாடல் பொருட்டு அமைக்கப்படும் கட்டுமலை

செய்தனகள் = செய்தவகைகள்

செய்ந்நன்றி குன்றேன்மின் = செய்த நன்றியை மறவாதீர்கள்

செய்மிறை = செய்யுநடுக்கம்

செய்யப் பெறாய் = செய்யாய்

செய்வானின்றகளும் = எதிர்காலத்திலுள்ள செயல்களும்

செய்வினை = முற்பிறப்பில் செய்த கருமம்

செருந்திப்பொழில் = சுரபுன்னைச்சோலை

செருநுதல் = போர்முகம்

செல்சார்வு = அடைதற்குரிய இடம்

செல்லா நல்லிசையாய் = அழியாத புகழையுடையவனே

செல்வவிபீடணற்கு = அழியாத செல்வமாகிய பக்தியுடைமைபற்றி செல்வ விபீடணன் என்று சிறப்பிக்கின்றார்

செல்வரிப்போதில்லை = உங்களுக்கு வேண்டியவற்றைச் கொடுக்கவல்ல செல்வர்கள் இல்லை

செல்வன் = சிறந்த குணங்கள் பொருந்திய செல்வ நம்பி

செல்வு = செல்வம்

செலக்காண்கிற்பார் = முன்பு பெற்ற ஞானம் போதாது என்று மேன்மேலும் ஞானத்தைப் பெருக்கிக் கொண்டு காணவல்லார்

செவ்வி = அழகு

செவிப்பூ = மகளிர் அணி

செற்றம் = பகைமை, கோபம், பொறாமை

செற்றலேறி = ஈமுட்டையிட்டு

செற்றார் = பகைவர்

செற = சீறிக்கோபிக்க

செறுதல் = அழித்தல்

செறுப்பனாகில் = கோபித்துக்கொள்வேனாயின்

செறுவாரு நட்பாகுவர் = பகைவரும் நண்பராவர்

சென்னி = நெற்றி

சே அதக்குதல் = கிட்டிகட்டி அடித்தல்

சேக்கழுத்தின் மணிக்குரல் = இடபத்தின் கழுத்தில் கட்டப்பட்டுள்ள மணி ஓசை

சேட்டை = மூதேவி

சேடர் = இளம்பருவமுள்ளவர்

சேடார் பொழில் = இளமைபொருந்திய சோலை

சேடு = சேண்

சேடு = கரை

சேடேறுபொழில் = இளமை பொருந்திய சோலை

சேது = திருவணை

சேது பந்தனந்திருத்தினாய் = அணை கட்டுதலை நன்றாகச் செய்தவனே

சேமம் = எப்போதும் ரட்சகன்

சேமம் செங்கோனருளே = நம்மைப் பாதுகாப்பது எம்பெருமானது திருவருள்

சேமவைப்பு = சேமித்து வைத்த தனம்

சேய் = முருகன்

சேர்கொடான் = அகப்படும்படி பண்ணான்

சேரிகையேறும் = ஊரில்பரவும்

சேவகங் கொள்ளுதல் = அடிமை கொள்ளுதல்

சேவகம் = வீரப்பாடு

சேவகன் = வீரன்

சேவகனார் = பெருமாள்

சேவடி = சிவந்த பாதம்

சேவையதக்கி = இடபங்களை அடக்கி

சேவியேன் = வணங்கமாட்டேன்

சேழுயர்ந்த மணிமாடம் = மிகவும் உயர்ந்த அழகிய மாடங்கள்

சேறை = பஞ்ச ஸார க்ஷேத்திரம்

சைவர் = சிவ தீட்சை பெற்றுச் சிவனைவழிபடுவர்

சொட்டைநம்பி = ஆளவந்தார் குமாரர் மணக்கால் நம்பியை ஆச்ரயித்தவர்

சொப்பட = நன்றாக

சோத்தம் = அஞ்சலி பண்ணுமவர்கள் அதற்கு அனுகூலமாகத் தாழ்ச்சி தோற்றச் சொல்லுவதொரு (பாசுரம்) சப்தவிசேஷம், தாழ்ந்தார் சொல்லும் சொல்

சோத்து = சோத்தம்

சோதிவட்டங் கொல்முகம் = சோதிமண்டலமோ

சோதிவெள்ளம் = அழகுவெள்ளம்

சோப்பூண்டு = அடிபட்டு

சோம்பர் = சோம்பேறிகளாய்த் திரிபவர்கள்

சோம்பாது = பின்வாங்காமல்

சோமு = சோமயாகம்

சோரேல் கண்டாய் = நழுவவிடாதே

சோலுதல் = கவர்ந்து கொள்ளுதல்

சோலை = திருமாலிருஞ் சோலை

ஞானக்கை = ஞானமாகியகை

ஞானச்சுடர்விளக்கு = அறிவாகிய பிரகாசமான தீபம்

ஞானத்தமிழ் = அறிவைக் கொடுக்கக்கூடிய திருவந்தாதிப் பிரபந்தம்

ஞானமேபடை = அறிவே கருவி

ஞானப்பிரான் = அறிவைக் கொடுக்கும் எம்பெருமான்

ஞானமும் முடமும் = அறிவும் அறிவில்லாமையும்

ஞானிக்கும் = அறிவாளிக்கும்

தக்கணை = தக்ஷிணை

தகவிலி = ஈரநெஞ்சில்லாதவன்

தகளி = அகல்

தசக்கீரீவற்கிளையோன் = இராவணன் தம்பி விபீஷணன்

தசாவதாரம் = பத்து அவதாரம்

தஞ்சுடையாளர் = தஞ்சமாகவுடையவர்

தஞ்சை = தஞ்சை மாமணிக்கோயில்

தஞ்சையாளி = தஞ்சை மாமணிக் கோயிலை ஆள்பவன்

தட்ட = அடைத்த, தடுத்த

தட்டு = இதழ்

தட்டுளுப்பு = தடுமாற்றம்

தட்டொளி = கண்ணாடி

தடம் பொங்கத் தம் பொங்கோ = ஜயசூசகவாத்தியத்தின் சப்தாநுராகம்

தடவந்து = பரிசித்த

தடவிற்று = பரிசித்தது

தடா = ஒருவகை நவபாண்டம்

தடாவிய = பரந்த, வளைந்த

தடாவியதே = கோடியது

தடித்தல் = பெருத்தல்

தடிப்ப = துடிப்ப

தடிபிணக்கு = தடி கொண்டு பிணங்கும்படியாகும்

தடு குட்டமாய் = தலைகீழாய்

தண்கடல் வட்டம் = குளிர்ந்த கடலால் சூழப்பட்ட பூமண்ட லம்

தண்டகாரணியம் = தக்கணதேசத்தில் துறவிகள் வசித்துவந்த ஒருவனம்

தண்டம் = சேனை, தண்டனை

தண்டவரக்கன் = இராவணன்

தண்டு காலாவூன்றி = தடியைக் காலாகக் கொண்டு ஊன்றி

தண்ணாவது = தாமதியாமல்

தண்ணுமை = மத்தளம், வேறுவேறு

தண்ணெனவு = மென்மைத் தன்மை

தணர்தல் = பிரிதல் பெரிய

தணிகிடாய் = தணித்துக்கொள்

தத்து = ஸ்வீகாரம்

தத்துவமன்று தகவு = தகவு அன்று தத்துவம், நீ இப்படி இருப்பது உனக்குத் தகுதி அன்று, இஃது உண்மை

தத்துவமிலி = உண்மை இல்லாதவன்

தத்துவன் = எனது தன்மை உள்ளவன்

தத்துறல் = கிட்டுதல்

தத்துறுமாகில் = கிட்டுமாகில்

ததர்கை = நெரிகை

தகர்த்தாதே = நோவு படுத்தாதே

ததைத்துக் கொண்டு = நெருங்கிக் கொண்டு

தந்தச்சீப்பு = தந்தத்தினால் செய்த சீப்பு

தந்தம் மக்கள் = தங்கள் தங்களுடைய பிள்ளைகள்

தந்துவன் = தந்து, கொணர்ந்து ; உவன் = நடுத்தரமாய் இருப்பவன்

தம்பகமாய் = புதராய்

தம்பர மல்லன = தம்மால் தாங்க முடியாதவற்றை

தம்மன்னை = தாய்

தம்மனை = தாய்

தமப்பன்மார் = தகப்பன்மார்

தமர் = உறவினர்

தமருகந்த தெவ்வுருவம் = ஆச்ரிதர்களால் விரும்பப்பட்ட உருவம் எதுவோ

தமனகம் = தவனம்

தமியாட்டி = தனிமையையுடையவள்

தமிழ் நல்மாலை = தமிழ்மொழியினால் ஆகிய நல்ல சொல் மாலைகள்

தமிழோசை வட சொல்லாகி = தமிழ் வேதத்தாலும், வடமொழி வேதத்தாலும் பிரதிபாதிக்கப்படுகிறவன்

தயங்குதல் = அசைதல்

தரணி = பூமி

தரு = மரம்

தருக்கு = அகங்காரம், ஹிம்சை

தருக்குகை = வருத்துகை, சுளிக்கை

தருமன் = யமன்

தலைச்சங்கம் = தலைச்சங்காடு

தலைச் சிரைத்து வாழ்தல் = திருவாசலிலே காவலாளராக இருந்து வாழ்தல்

தலை நிலாப்போது = குழந்தைப் பருவம்

தலைப்பழியெய்தல் = பெரும் நிந்தைகளைப் பெறுதல்

தலைப்புகழ் = சிறந்த புகழ்

தலைப் பெய்திடல் = சேர்ந்துவிடல்

தலை மறிதல் = நீங்கல்

தலைவிளாக் கொள்ளுதல் = முழுதும் வியாபித்தல்

தவராசா = மகா தபஸ்வியே

தவளப் பொடி கொண்டு = சுத்தமான தூளி கொண்டு

தவிவு = விச்சேதம்

தழீஇக் கோளியார் = தழுவிக்கொண்டவர்

தழுத் தொழிந்தேன் = தழுதழுக்கும்படியானேன்

தழுவி முழுசி = முழுவித்தழுவி

தழை = தொங்கல், பீலிக்குடை விசேஷங்கள்

தழை = திரள்

தழைக்கா = குடையாகிற சோலை

தழைகள் = மயில் தோகைக் குடைகள்

தள்ளம் பாறி = தடுமாறி

தளர் நடை = காலூன்றி நடக்கும் பருவம், அன்றிக்கே நடக்கின்ற தசை ஆகையாலே தள்ளம்பாறி நடக்கும் நடை

தளைக் காலன் = விலங்கு பூட்டப்பட்ட கால்களையுடையவன் சிற

தன் பேரிட்டு = கோவர்த்தனன் என்ற தனது பெயரை மலைக்கு வைத்து தன்ம பாவம் = தருமமும், பாவமும்

தன்னானார் = தன்னைப் போன்றவர்

தன்னுடைச் சோதி = தன்னுடைய விக்கிரகம்

தனஞ்செயன் = அருச்சுனன்

தனிக் காளை = ஒப்பற்ற யுவாவான கண்ணன்

தாசரதி = இராமபிரான் (தத்திதாந்த நாமம்)

தாடகை = சுகேதுவின் பெண், சுந்தனுடைய மனைவி விசுவாமித்திரர் ஏவலால் இராமன் இவளைக் கொன்றான்

தாடாளன் = மேன்மையுடையவன்

தாபதர் = இருடிகள்

தாமம் = ஸ்தானம்

தாய் = தாவி

தாய் மனத்திரங்கி = தாய் போல மனமிரங்கி

தாயப் பதி = பழமையாய் இருக்கின்ற ஸ்தானங்கள்

தாயம் = பங்கு

தாயர் வாய்ச்சொல் = தேவகியின் வாய்ச்சொல்

தாயிருக்க மணை நீராட்டுதல் = பெற்ற தாய்க்கு ஒரு உபசாரமும் பண்ணாமல் அறிவற்ற மணைக் கட்டைக்கு உபசாரம் செய்தல்

தாயோன் = தாவியவன், தாயானவன்

தார்க்கிளந் தம்பிக்கு = பரதன்

தாரகை = பூமி

தாரா = ஒரு பறவை

தாரா கணம் = நக்ஷத்திரக் கூட்டம்

தாரித்து = தரித்து, நீண்டு கிடக்கிறது

தாலேலோ = தாலேலோ தாலேலோ என்றது குழந்தையைத்

தாலாட்டுவார் கூறும் ஒருவகை வாய்பாடு

தால் = நா

தாலொலித்திடும் = தாலாட்டும்

தாவடியிடல் = தாவியடியிடல்

தாவளந்துலகம் = தாவித்திரிந்து

தாழ் சடையும் = தாழக்கட்டின சடை

தாழ்வர் = பரிபந்தம்

தாழ் பீலி = வாத்தி வகை

தாழும் = தாழ்த்தல், தாழ்ச்சி

தாள் கொளுவி = பூட்டைத் தொடுத்து

தாளும் தடக்கையும் = கால்களையும், கைகளையும்

தாறு = அளவு; ரேகை

தன்றாம மேவி = பரமபதத்திற்குச் சென்று

தான் = ஸ்வரூப நிரூபணம்

தானத்தே வைத்தல் = இருந்த இடத்தில் வைத்தல்

தானவன் = அரக்கன்

தானாக நினையானேல் = அவன் தானாக என்னை நினைக்கா விட்டாலும்

திங்கள் சிறை விடுத்து = சந்திரனை ரோகமாகிய சிறையிலிருந்து விடுவித்து

திங்களம் பிள்ளை = பிறைச் சந்திரனாகிய அழகிய பிள்ளை

திங்களைக் கோள் விடுத்து = சந்திரனுடைய ஒளியை விரித்து

திசைக்கும் = அறிவழியா நிற்பள்

திசைப்ப = திகைப்ப, அறிவு கெடும்படி

திசை முகனனைய மறையோர் = பிரமனைப் போன்ற அந்தணர்கள்

திட் கொடி = அவிழ்த்துக் கொட்டாத கொடி

திடரே = ஸ்திரப்பட்டவர்

திண்டிறலார் = மிக்க பலசாலிகள்

திண்ணம் = திருடம்

திண்ணார் மதிள் = வலிமை பொருந்திய மதில்

திண்ணார் மாடங்கள் = வலிமை மிக்க மாடி வீடுகள்

திண்ணெவு = வலிமை

திண்ணை = மேட்டிடம்

திணர்த்த வண்டல்கள் = இறுகலையுடைத்தான

திணரார் மேகம் = திண்மை மிக்க மேகங்கள்

திணிம்பு = செறிவு

திரி காதுக் கிடுதல் = நூல்திரியை காதுக் கிடுதல், காதுகுத்தி நூல்திரியை இட்டுக்காதின் துளை பெரிதான பின்பு காதணி இடுதல்

திரிசுடர் சூழும் மலை = இடைவிடாது சஞ்சரிக்கின்ற சந்திர சூரியர்கள் பிரதக்ஷிணம் பண்ணுகின்ற மலை

திரிதர்வேன் = திரிந்து கொண்டிருந்தேன்

திரி மூர்த்தி = மும் மூர்த்திகள் (பிரமன், விஷ்ணு, ருத்திரன் )

திரி விக்கிரமன் = திருமால்

திருக்கடித்தானம் = அம்பலப்புழாவிலிருந்து 23 கல் தொலைவில் உள்ளது

திருக்கண்ணணங் குடி = இத்திருப்பதி கீவளூர் இரயில் நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது.

இத்தலத்தை பற்றி தீரா வழக்கு திருக்கண்ணங் குடி என்ற பழமொழி உள்ளது. இந்திருப்பதி திருவாருக்கு நான்கு கல் தொலைவில் உள்ளது

திருக்காலண்ட பெருமானே = திருவடியைக் காரியம் கொண்ட

திருக்குடந்தை = இது சோழ நாற்றுத் தலம்

திருக்குருகூர் = இத்திருப்பதி ஆழ்வார் திருநகரி இரயில் நிலையத்தின் அருகில் உள்ளது

திருகுறளன் = ஸ்ரீவாமனன்

திருக்கூடல் கூட இழைப்பவன் = சகுனம் பார்க்கும் வகையில் இஃது ஒருவகை

திருக்கோட்டி = பாண்டி நாட்டு திருப்புத்தூருக்கு 21 கல் தொலைவில் உள்ளது

திருக்கோவலூர் = இத்திருப்பதி திருக்கோயிலூர் நிலையத்திற்கு மேற்கே 2 கல் தொலைவில் உள்ளது

திருச்சிற்றாறு = திருசெங்குன்றூரிலுள்ள உள்ள ஒரு நதி

திருத் தண்கால் = இது ஸ்ரீ வில்லி புத்தூருக்கு அருகில் உள்ளது. தண்கால் என்பதற்கு குளிர்ந்த காற்று என்று பொருள். சீதவாபுரம் என்பர்

திருத்தன் = திருப்தியாக இருப்பவன்

திருத்தாய் = நீ திருத்த வேண்டும்

திருத்திப் பணி கொள்ளல் = விரோதிகளைத் திருத்தி அடிமை கொள்ளுதல்

திருத்தெற்றியம்பலம் = திருநாங்கூரின் ஒரு பகுதியாகிய திருத்தெற்றியம்பலம் என்னும் திருப்பதி

திரு நறையூர் = நாச்சியார் கோவில்

திரு நாம மிடுதல் = ஊர்த்துவ புண்ட்ரம் இடுதல்

திருநாமம் எட்டெழுத்து = ஓம் நமோ நாராயணாய என்னும் அஷ்டாட்ச மந்திரம்

திருநாவாய் = இது செறு வண்ணுணூர் கள்ளிக்கோட்டை இரயில் பாதையில் திருநாவாய் நிலையத்திற்குத் தெற்கே பாரத் புழை என்ற ஆற்றங்கரையிலுள்ளது

திருநின்ற பக்கந்திறவிது = திருமகள் இருக்கின்ற வலப்பக்கமே சிறந்தது

திருநீர் மலை = நீரானது அரண் போல சூழப்பட்ட சூழப்பெற்ற மலையாதல் பற்றி இது திருநீர்மலை என்றாயிற்று

திருப்பாதகேசம் = வடசொல் தொடர்

திருப்புகழ்கள் = கீர்த்திகள்

திருமணி கூடம் = இத்திருப்பதி சீகாழிக்கு ஐந்துகல் தொலைவில் உள்ளது. நின்ற திருக்கோலம்

திருமல்வி நாடி = திருவில்லிபுத்தூரைச் சார்ந்த நாடு

திருமலை = திருப்பதி

திருமழிசை = திருமழிசைப்பிரான் அவதரித்த தலம்

திருமறு மார்வன் = பிராட்டியையும், ஸ்ரீவஸ்தம் என்னும் மறுவையும் உடைய மார்பன்

திருமூழிக்களம் = எர்ணாகுளம் செறு வண்ணூர் இரயில் பாதையில் கருக்கட்டி நிலையத்திற்கு நான்கு கல் தொலைவில் உள்ளது

திருமெய்யம் = சத்யகிரி என்ற சொல்லே திருமெய்யமலை என்றும், அத்திருப்பதி திருமெய்யம் என்றும் வழங்கப்பெறும் எம்பெருமான் பெயர் சத்தியகிரிநாதர்

திருமோகூர் = இத்தலம் மதுரைக்கு 7 கல் தொலைவில் உள்ளது. வடமொழியில் மோகனபுரம் எனப்படும், இறைவன் பால் மோகத்தை (பக்தி) அருளும் ஊர் என்பது மோகூர் ஆயிற்று

திருவயிந்திர புரம் = அஹீந்திரன் என்னும் அநந்தாழ்வான் பூசித்த தலமாதல் பற்றி இதற்கு அயிந்திரபுரம் என்னும் பெயர்

திருவரங்கம் = ரங்கம் என்று விமானத்திற்குப் பெயர். அதுவே லக்ஷிணையால் திவ்யதேசத்திற்குத் திருநாமமாயிற்று

திருவல்லவாழ் = இத்தலம் கொட்டாரக்கராவிலிருந்து 36 தொலைவில் உள்ளது.

திருவல்லிக்கேணி = இத்தலப் புஷ்கரணி அல்லிமலர் நிறையப் பெற்றதனால் திருவல்லிக்கேணி என்று பெயர் பெறும். தீர்த்தத்தின் பெயரே தலத்திற்குப் பெயராயிற்று

திருவழுந்தூர் = சோழநாட்டில் மயிலாடுதுறையை அடுத்துள்ளது, கம்பர் பிறந்த ஊர், தேவாரப்பாடல் பெற்ற தலம்

திருவன் = அழகன்

திருவாகாரம் = திருமகள் இருக்கு மிருப்பு

திருவாலியிருந்தான் = திருமகள் எம்பெருமானை ஆலிங்கனம் செய்தமையால் ஆலி ஆயிற்று

திருவாழ் மார்பன் = திருமகள் இருந்து வாழப்பெற்ற திருமார்பையுடையவன்

திருவாளன் = திருமால்

திருவாறன்விளை = இத்தலம் கொட்டாரக்கராவிலிருந்து 37 கல் தொலைவில் உள்ளது

திரு விண்ணகர் = (விஷ்ணு நகர். விண்ணகர்) இப்பதி சோழநாட்டில் திருநாகேசுவரம் இரயில் நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது

திருவில்லாத்தேவரைத் தேறேன் மின் = நான்முகன்

திருவுடை மன்னர் = செல்வத்தையுடைய அரசர்கள்

திருவுறுக = திருமேனி அழகு விளங்கட்டும்

திருவெட்டெழுத்து = ஓம் நமோநாராயணாய

திருவெவ்வுள் = திருமால் சாலிஹோத்திர மகரிஷிக்குப் பிரத்யக்ஷமாகி உறைதற்குரிய உள் எவ்வுள் என வினவியதனால் திருவெவ்வுள் என்று பெயராயிற்று

திருவெள்ளக்குளம் = இப்பதி சீர்காழியை அடுத்து நான்குகல் தொலைவில் உள்ளது

திருவேங்கடத்தான் = திருமலையில் உள்ளவன்

திருவேங்கடப் பொருப்பர் = திருமலையில் உள்ள பெருமாள்

திருவேங்கடம் = அழிவற்ற ஐசுவரியம்

திருவோணத்தான் = சிரவண நட்சத்திரத்தில் அவதரித்தவன்

திருவோணத்திரு விழவு = சிரவண நட்சத்திரத் திருநாள்

திரேத(யுகம்) = நான்கு யுகங்களுள் இரண்டாவது

திரேதை = த்ரேதாயுகம்

தில்லை மூவாயிரவர் = தில்லையில் இருக்கின்ற மூவாயிரம் அந்தணர்கள்

திலதம் = திலகம்

திலோத்தமை = நாடகத்தெய்வ மகளிர் எண்பததின்மருள் ஒருத்தி

திவம் = பரமபதம்

திவளுதல் = ஒளிவிடுதல்

திளை = பருமை

திறவிது = பரதத்துவம்

தீங்கவி = மதுரமான கவி

தீத்தொழில் = அக்கினி ஹோத்திரம்

தீதில் நன்னெறி = குற்றமில்லாத நல்வழி

தீப்பப் பூடுகள் = கொடிய பூண்டுகள்

தீ மனம் கெடுத்தல் = தீயமனத்தைக் கெடுத்தல்

தீம் பலங்கனி = மதுரமான பலாப்பழம்

தீயிணைக்கிணைங்காடி = களவுப் புணர்ச்சி செய்து

தீயில் மூன்று = சப்தம், ஸ்பர்சம், ரூபம்

தீயினில் தூசாகும் = நெருப்பிலிட்ட பஞ்சுபோல் உருவழிந்து போகும்

தீ யோங்க யோங்க = அக்கினி காரியங்கள் வளர வளர

தீர்த்தகரர் = பரிசுத்தப் படுத்துவோர்

தீர்த்தன் = பரிசுத்தன்

தீரா மாற்றாக = பரிகாரமில்லாத செயலாக

தீ வலஞ் செய்தல் = ஏழடி நடந்து அக்கினியை வலம் வருதல்

தீவிகை = விளக்கு

தீ விழித்தல் = நெருப்புப்பொறி பறக்கும்படி கண்களை விழித்தல்

தீ விளி விளிதல் = மிகக் கொடுமையான வார்த்தைச் சொல்லுதல்

தீ வினைக்கரு நஞ்சை = கொடிய துன்பத்தை உண்டு பண்ணுகிற தீய செயல்களை எம்பெருமான் எளிதில் போக்குபவன்

தீற்றி = உண்ணப் பண்ணி

துக்கக் சூழலை = துக்கங்களாகிற சுழலாறு

துங்கார் = துங்கம், ஒக்கம்

துங்கு = துங்கம்

துச்சோதனன் = துரியோதனன் தம்பி

துடியிடையார் = உடுக்கை போன்ற இடையையுடைய பெண்கள்

துண்ணெனை = சீக்கிரமாக

துணரி = பூங்கொத்து

துணிவதுசூதே = காரணம்

துதம் = ஸ்துதம், ஸ்தோத்திரம்

துந்தி = திருநாபி

துப்பம் = நெய்

துப்பரவாம் = சக்தியையுடைவனான

துமிலம் = பெரிய ஆரவாரம்

துயக்கு = கலக்கம்

துயராட்டியேன் = துன்பத்தையுடைய நான்

துரகம் வாய் பிளந்தது = குதிரை வடிவு கொண்ட கேசி என்னும் அசுரனுடைய வாயைப் பிளந்தது

துரிசன் = கள்ளன்

துலை கொண்டு = துலைத்தலைக் கொண்டு

துலையாய் = பரிமாணமாகி

துவக்கற = ஸ்பரிசம் அற

துவர்தல் = உலருதல்

துவர்ப்பு = (மாந்தளிர்) துவர்ப்பென்னும் ரசம்

துவராபதி = துவாரகை

துவரித்தவுடையார் = காவித்துணிகட்டித் திரியும் பௌத்தர்

துவரியாடையார் = காவியுடை அணிந்தவர்கள்

துவர்ந்து துவர்ந்து = மிகவும் உலர்ந்து

துவராடையுடுத்து = காவியூட்டிய ஆடையை உடுத்து

துவரிக் கனிவாய் = இலவம்பூ

துவருடுக்கை = காவியுடை

துவரை = துவாரகை

துவாபரயுகம் = யுகங்கள் நான்கனுள் மூன்றாவது

துழதி = சுழற்சி

துழதிப்படாதே = துக்கப்படாதேயிருங்கள்

துழாய் = துழாவி

துழாய் மாலை = துளசி மாலை

துள்ளம் = துளி

துளக்கம் = சலிப்பு, இடைவீடு

துளம் = மாதுளம், பீலிக்காம்பு, களைக் கொட்டு

துளவுத் தொண்டு = திருத்துழாய்த் தொண்டு

துளவும் கூடையும் பொலிந்து = திருத்துழாயும், பூக்குடலையும் விளங்க

துளும்பு = அலைய

துற்று = உணவு (கவளமாக)

துற்றற்றா = ஒரு கவளத்திற்கும் போதாது

துற்றிய = உண்ட

துற்றுவார் = புசிப்பார்

துறவி = துறந்தவன்

துன்றோளித்துகிற் படலம் = ஒழுங்கு, கொடிகள்

தூங்கார் = அசைவு

தூசணம் = தூஷணம்

தூது வந்த குரங்கு = அநுமன்

தூதை = சிறு சோறு சமைக்குமட் பாத்திரம், விளையாட்டுக் கருவி

தூராக்குழி = தூர்த்தல்

தூரியம் = வாத்தியம்

தூவிக் குருகு = வெள்ளைக் குருகு

தூற்றித்து = தூற்றின அதுவே

தூறுகள் = புதர்கள்

தெக்கு = தெற்கு

தெட்டப்பழம் = பக்குவமான பழம்

தெட்டித் திளைக்கும் = முற்றிக்களியா நிற்கும்

தெப்பராவர் = அற்பர்

தெய்வச் சிலையான் = திருப்புல்லாணி இறைவன் பெயர்

தெய்வ நன்மாலை = திவ்வியமான நல்ல சொல் மாலை

தெய்வ நாயகன் = திருவயிந்திரபுர இறைவனின் பெயர்

தெய்வ நாறுதல் = நல்ல வாசனை வீசுதல்

தெய்வப் புள்ளேறி வருவான் = (தெய்வப்புள் – கருடன்)

தெருவிற்றிரி நோன்பியர் = தெருவில் திரிகின்ற சமணர்

தெழ்கு = இடைச்சுரிகை

தெள்கி = இளைத்து

தெள்ளிய சிங்கம் = திருவில்லிகேணியில் எழுந்தரியுள்ள அழகிய சிங்கப் பெருமாளுக்குத் தெளிசிங்கப் பெருமாள் என்று திருநாமம் வழங்க பெறுகின்றது

தெளி விசும்பு கடிதோடி = நிர்மலமான ஆகாசத்திலே விரைவாக ஓடி

தெளிவிலாக் கலங்குனீர் சூழ் = தெளியாமல் கலங்கியிருக்கிற காவிரியாலே சூழப்பெற்ற

தெற்றல் = வலிமை

தேற்றியம்பலம் = சீகாழியிலிருந்து ஐந்துகல் தொலைவில் உள்ளது. தெற்றி அம்பலம் என்பதற்கு கோவில் மேட்டிடமாக அமைத்த மன்றம் என்பது பொருள்

தெற்றெனவு = தெளிவு, பெருமை

தெறிவில் = சுண்டுவில்

தென் குடந்தை = திவ்விய திருப்பதி

தென் குளத்தை = ஸ்ரீவைகுண்டத்திலிருந்து ஏழு கல் தொலைவில் உள்ளது.

தென் கொள் திசைக்கும் திலதம் = தெற்குதிக்குத் திலகம்

தென் தில்லைச் சித்திர கூடம் = கோவிந்தராசன் சந்நிதி என்பர். இராமனுக்கு வடநாட்டுச் சித்திர கூடத்தைப் போல இத்தலமும் உகந்த திருப்பதி

தென்புலக் கோன் = இமயன்

தென்புலர் = யமபடர்

தென்றமிழன் = தெற்கிலுள்ள தமிழ்நாட்டுக்காரன்

தென்றி = சிதறி

தென்றிருப்போரை = ஆழ்வார் திருநகரிலிருந்து 3 கல் தொலைவில் உள்ளது

தென்றுதல் = சிதறுதல்

தென்னரங்கன் = அரங்கநாதன்

தென்னவன் = யமன், பாண்டியன்

தென்னவென்று = தென்ன தென்ன என்று ஆளத்திவைக்க

தென்னன் = மலையத்துவச பாண்டியன்

தென்னன் குருகூர் = தெற்குத்திக்கிலுள்ள திருநகர்

தென்னன் குறுங்குடி = குறுகியவனான வாமநனது சேஷத்திரமாதல் பற்றிப் பெயர் பெற்றது

தென்னன் திருமாலிருஞ் சோலை = இத்திருப்பதி மதுரையிலிருந்து 12 கல் தொலைவில் உள்ளது

தென்னன் தொண்டையர்கோன் = தொண்டைமான் என்பவன் தென்னவனுடைய வமிசத்தில் தோன்றினமை பற்றித் தென்னன் தொண்டையர்கோன் என வழங்கப்பெற்றான்

தென்னன் பொதியில் = பாண்டியனுடைய பொதிய மலையில்

தென்னனுயர் பொருப்பு = திருமாலிருஞ் சோலைமலை

தென்னனோட வடவர சோட்டங் கண்ட = சோழனும் தோற்று ஓடும்படியாகச் செய்த

தென்னாடன் = தென் தேசத்தரசன்

தென்னா தெனா வென்று = தாளச் சொற்கட்டு

தென்னானாய் = தெற்கே உள்ள ஆனை. திருமாலிருஞ்சோலை மலையில் நின்ற யானை போன்றவனே

தென்னுரை = தமிழுரை

தேக்கம் = தாமதம்

தேசம் = புகழ்

தேசமறியவுமக்கே ஆளாய் = உலகமெல்லாம் அறியும்படி உமக்கே தொண்டராய்

தேதென வெனல் = தென்னதென்ன என்று

தேர்வழி தூரல் = தேர் போன வழியை அழித்திடாதே

தேராழியால் மறைத்தார் = சக்ராயுதத்தால் சூரியனை மறைத்த பெருமான்

தேவர் காரியம் = பகவதாராதனம்

தேவகி சிங்கமே = தேவகி வயிற்றில் தோன்றிய சிங்கக் குட்டியே

தேவிமை தகுவார் = உம்மோடு, ஒக்க முடி சூடுகைக்குத் தகுதியாக இருப்பவர்

தேவில் = கோயில்

தேவை = அடிமை

தேற்றன்மை = தெளிவு

தேனித்து = இனித்து

தேனும் பாலுங் கலந்தன்னவர் = தேனும் பாலும் ஒன்றாகச் சேர்ந்தாற்போல ஏகரசமாக இருக்கின்ற பக்தர்கள்

தைத்திரியன் = தைத்திரீய உபநிடதத்தினால் சொல்லப்படுகிறவன்

தைவருகை = தடவுதல்

தொங்கல் = மாலை, பீலிக்குடை விசேடம்

தொடர் = தொடர் சங்கிலி

தொடுப்புண்ணுதல் = திருடியுண்டல்

தொடுப்புண்ட = ஒளித்துண்ட

தொடுவுண்ட = களவினால் உண்ட

தொடுவுண்ண = களவினால் உண்ண

தொண்டர் தம்மை = நீசர்களை

தொண்டரைப் பாடும் = தொண்டர் என்ற சொல் இங்கு நீசர்களைக் குறிக்கின்றது

தொண்டனேன் = அடியேன்

தொண்டையர் கோன் செய்த = தொண்டைமான் சக்கரவர்த்தி செய்த

தொழு = தொழுவத்தில்

தொழுகுலம் = வணங்குதற்குரிய குலம்

தொழுத்தனில் = தொழுவில்

தொழுத்தைமார் = அடிமை செய்யுமவர்கள்

தொழுதுவனாய் = அஞ்சலி செய்து கொண்டு முன்நிற்றல்

தொழும்பர் = நீசர்

தொளி = வீதி

தொறுப்பாடி = ஆய்ப்பாடி

தோக்கை = முன்தானை

தோண்டல் = ஊற்றுக்கள்

தோத வத்தி = தோய்த்து உலர்த்தின வஸ்திரம்

தோரணவாயில் = தெருவில் கட்டும் அலங்காரத் தொங்கலை உடைய வாசல்

தோழமை = நட்பு

தோள் குலைச்கப்படுதல் = தோள்கள் அசைந்தாடப்படுதல்

தோள் விசிறி = தோள் வீசி

தோளாத மாமணி = துளை பட்டு ஒளி மழுங்காத, நீலமணி

நக்கபிரான் = சிவபெருமான்

நகந்தாய் (நகத்தாய்) = நகத்தையுடையவனே

நகரிழைத்து = கோயில் கட்டி

நங்கைமீர்கள் = பெண்கள்

நச்சிலை கொல் = நஞ்சு வடிவாயிருப்பதோர் இலையே

நச்சு மாமருந்தம் = விரும்பப்படுகிற சிறந்த மருந்து

நஞ்சு = நைந்து

நடுவு பாட்டு = நடுவிடம்

நண்ணணம் = சிறிது

நண்ணார் முனை = பகைவர்களுடைய யுத்தத்தில்

நந்தி பணி செய்த நகர் = ஓரரசன்

நப்பின்னை = திருப்பா

நம்பர் = விசுவனீயர்

நம்பரமன்று = நம்மால் எம்பெருமான் பெருமைகளைப் பேசி முடிக்க முடியாத

நம்பன் = திருமால்

நம்பி = நற்குணங்களால் நிறைந்தவன்

நம்பிமீர் = உலகினரே

நம்புதல் = விரும்புதல்

நம்மன் = பூதப்பிரேத பிசாசங்கள்

நமர் = நம்மைச் சேர்ந்தவர்

நமவென்ன = நமோ வாசகம்

நமன் சூழ் = யமனைத் தலைவனாகக் கொண்ட மூன்றாந்தி

நமன்று = வணங்கி

நமனார் பாடியைப் பெரிதும் = யம பட்டணம்

நமுக = குழையும்படி

நமுசி = மகாபலியின் குமாரன்

நமையாமல் = உபத்திரவம் செய்யாமல்

நயவேன் = ஆசைப் படேன்

நயாசலன் = நீதிக்குக் குலைதலில்லாதவன்

நரகநாசன் = நரகத்தை ஒழித்தருளுகிறவன்

நரகம் = ஸம்ஸாரம் (விவேகிகள் ஸம்ஸாரத்தை நரகம் என்ற பெயரால் வழங்குவர்)

நரகன் = நரகாசுரன்

நரசிங்கன் = நரசிம்மன்

நரத்திலும் = மனுஷ்ய யோனியிலும்

நர நாராயணர் = திருமால் அவதாரமான இரு முனிவர்

நரம் = நரசென்மம்

நரியாயரக்கர் = நரிபோல அரக்கர்கள்

நல்கல் = கொடுத்தல்

நல்குவான் = கொடுப்பான்

நல்லரன் = சிவபெருமான்

நல்லனகள் = நன்றாய்

நலங்கழல் = ருசி ஜனகமான திருவடி

நலந்திகழ் நாரணன் = கலியாண குணத்தையுடைய நாராயணன்

நலமந்த மில்லதோர் நாடு = அளவுகடந்த ஆனந்தம் இருப்பதான நாடு

நவிலுகை = சொல்லுகை

நள்ளி = பெண்நண்டு

நளிர்ந்த = சிதளமான

நளிர் மதிச்சடையன் = சிவபெருமான்

நற்கிரிசை = நல்ல வியாபாரம்

நற்றம் = நன்மை

நறையூர் = திருநறையூர் என்றது நாச்சியார் கோயிலைப் பற்றியது. கும்பகோணத்திற்கு ஆறுகல் தொலைவில் உள்ளது

நன்புருகி = ஞானம், நன்மை

நன்னடுவுள் = நன்றான நடுவுள்

நன்னாளால் = நல்ல நாளும்

நாக்கு நீளுதல் = அளவுகடந்து பேசுதல்

நாக்கொண்டு = நாவினால்

நாகணை = ஆதி சேஷனாகிய படுக்கை

நாகராயன் மடப்பாவை = அருச்சுனன் மனைவி

நாகரிகர் = ரஸிகர்

நாகு கன்றுள்ளினாற் போல் = இளங்கன்று தன் தாயை நினைத்துக் கத்துமா போல்

நாகை = நாகப்பட்டினம் என்பதன் மரூஉ

நாகையழகியார் = நாகையில் எழுந்தருளியுள்ள சௌந்தர ராஜப் பெருமாள்

நாங்கூர் = திவ்விய தலம்

நாங்கை = மயிலாடுதுறைக்கு வடகிழக்கிலுள்ள திருப்பதி

நாட்காலே நீராடல் = விடியல் காலத்தில் நீராடுதல்

நாட்டு மானிடத் தோடெனக் கரிது = எனக்கு நாட்டிலுள்ள மனிதர்களோடு வசிப்பது என்பது அரிது

நாடகத்தொலி = நடனத்தினுடைய ஓசை

நாண் மட மச்சம் = இவை பெண்களுக்குரிய குணங்கள், நாணமாவது தகாத காரியத்தில் மனம் ஒடுங்கி இருப்பது, மடமாவது எல்லாம்

அறிந்தும் அறியாது போன்றிருத்தல், அச்சமாவது மிகச்சிறிய காரணத்தினாலும் மனம் நடுங்குதல்

நாணற் படுத்துப் பரிதி வைத்தல் = பசுமையான நாணற்புற்களை அக்னிக்கு நான்கு புறங்களிலும் வைத்தல்

நாதானை = நாதனாய் இருப்பவன்

நாந்தகம் = திருமாலின்வாள்

நாமங்கை = சரசுவதி

நாமதேயம் = பெயர்

நாரணம் = ஓம் நமோ நாராயணாய என்றும் அஷ்டாக்ஷரமந்த்ரத்தைக் குறிக்கும்

நாராயணா என்னும் நாமம் = அஷ்டாக்ஷர மகாமந்த்ரம்

நால்வேதம் = ரக் யஜூஸ் ஸாமம் அதர்வணம்

நாலிரு மூர்த்தி = அஷ்டாக்ஷர ஸ்வரூபி

நாலு மூர்த்தி = பிரதாநம் புருஷன் அவ்யக்தம் காலம்

என்னும் இவற்றைச் சரீரமாகக் கொண்ட நாலுமூர்த்தியாய்

நாலைந்து திங்களில் சகடம் சாடியது = நான்கு ஐந்து மாதத்தில் சகடாசுரனை அழித்தது

நாவகாரியம் = நாவினால் சொல்ல வொண்ணாத

நாவல் = தோற்றவர்கள் முன்னே ஜயித்தவர்கள்' சொல்லுஞ்சொல் அறையோவறை யென்னுமாப் போல

நாவழித்தல் = நாக்கை வழித்தல்

நாவாய் = பாரத்புழை என்ற ஆற்றங்கரையில் உள்ளது இத்திருப்பதி

நாழ் = சாமர்த்தியம், நானென்னும் செருக்கு, அகங்காரம், அர்த்தமில்லாத வார்த்தை

நாழ்மை = ஏற்றம்

நாழம் = குற்றம்

நாழல் = கோங்கு

நாழிவளோ = நாழ், சுதந்திரமாய் நடக்கும் செருக்கு

நாளோலக்க மருளுதல் = சபையிலிருந்து அருள்பாலித்தல்

நான்முகன் = பிரமன்

நான்று = காலத்தில்

நானப்புதலில் = மஞ்சள் தூற்றில்

நானம் = சந்தனம், கத்தூரி, கர்ப்பூரம் முதலான சுகந்த திரவியம், மஞ்சள்

நானாவிதம் = பலவிதம்

நானிலம் = பூமி

நிச்சித்து = நிச்சயித்தது

நிமியும் வாய் = நெளிந்தவாயையுடையவள்

நியதம் = எப்பொழுதும்

நிரந்தரம் = இடைவிடாமை

நிரந்தவர் = பகை அரசர்கள்

நிருமித்தல் = சங்கற்பித்தல்

நிறைகோளுழவர் = பசுக்களை ஹிம்சிப்பதையே தொழிலாகவுடையவர்

நிரைப் பொற்பூ = ஒழுங்கான பொற்பூ

நில்லாப்பாய் = பின்தொடரா தொழியிலுமொழி

நில = நிலா

நிலத்தேவர் குழு = அந்தணர் தொகுதி

நிலந்தரஞ்செய்யும் = தரைமட்டமாக்கிவிடும்

நிலாகின்ற = விளங்கி வாழப் பெற்ற

நிலாத் திங்கள் துண்டத்தாய் = காஞ்சிபுரத்திரிருந்து ஒருகல் தொலைவில் உள்ளது

நிவர்த்தல் = ஓங்குதல்

நிவந்த = உயர்ந்த

விவந்து = உயர்ந்து

நிவா = வெள்ளாறு

நிவா = வழங்கொள்வதில்லை

நிழலுமடிதாறும் = பாதநிழலாகவும், பாதரேகையாகவும்

நிழறு = ஒளியைச் செய்கிற

நிழறுதல் = ஒளிவிடுதல்

நிறம் = வெளிது

நிறை = பெண் தன்மை

நிறைமொழி = வேதம்

நின் திருவானை = உனது பிராட்டியின் மேலாணை

நின்புள்ளுவ மறியாதவற்கு = புள்ளுவம், வஞ்சனை

நின்றவூர் = இப்போது திண்ணனூர் என்று வழங்குகிறது. சென்னை அரகோணம் பாதையில் உள்ளது

நின்றான் இருந்தான் = திருநிறையில் நின்ற திருக்கோலம் திருவாலியில் வீற்றுருந்த திருக்கோலம்

நின்னையே வேண்டி = உன்னையே விரும்பி

நினை தொறும் = நினைக்கும்தோறும்

நீர்கள் = நீங்கள்

நீர்மலை = பல்லாவரத்திலிருந்து 3 கல் தொலைவில் உள்ளது

நீரகம் = காஞ்சிபுரத்திலிருந்து முக்கால் கல் தொலைவில் உள்ளது

நீராட வாராய் = நீராடுவதற்கு வரவேணும்

நீலன் = திருமங்கையார், வானரர் தலைவன்

நீலார் கண்டத்தம்மானும் = கருமை

நீற்கண்டன் = நீலகண்டன் (நீலம் என்ற சொல் அம் கெட்டு நீல் என நின்று லகரம் றகரமாயிற்று)

நீறாடிதான் = சிவன்

நீறு = சுண்ணம், தூளி

நீறு செவ்வேயிடக்காணில் = நீறு பஸ்மம்

நீறுபூசி = திருநீற்றைப்பூசி

நுண்பு = நுண்மை

நுணுக்கிய மஞ்சள் = அரைத்த மஞ்சள்

நுளைப் பாவையர் = குறத்திகள்

நூக்க = தள்ள

நூல் = ஆகமம்

நூலாட்டி = லக்ஷ்மிநாதன்

நூலிழத்தல் = மாதர் மாங்கல்யமிழத்தல்

நூற்றவள் = (விசாரித்தவள்) கைகேயி

நூற்றவர் = துரியோதனாதியர்

நூறு தடாவில் வெண்ணெய் = நூறு பானைகள் நிறைய வெண்ணெய்

நெக = கழல

நெஞ்சகம்பால் சுவர் = நெஞ்சு என்றும் சுவரில்

நெஞ்சறவறப்பாடும் பாட்டை = பிரிவு பிரியும்படி

நெஞ்சிடிந்துகும் = நெஞ்சு சிதிலமாய்

நெஞ்சென்னும் பொன் வண்டு = நெஞ்சாகிய அழகியவண்டு

நெடுஞ்சொலால் மறுத்த நீசனேன் = நீண்டசொற்களாலே மறுத்த நீசனான நான்

நெடு நோக்குக் கொள்ளுதல் = நீண்ட நோக்குடன் எதிர்பார்த்தல்

நெடும்புரிசை = உயர்ந்த மதில்

நெடுமறுகில் = பெரியவீதியில்

நெடுமாலடியார் – திருமாலுக்குத் தொண்டு செய்பவர்கள்

நெய்ச் சுவைத்தேறல் என்கோ = நெய்போலும் சுவையை யுடைய தேன் என்று சொல்லுவேனோ

நெய் தொடுவுண்டு = நெய்யைக் கவர்ந்து உண்டு

நெல்லி = நெல்லி இலை

நெல்லி மல்கி = நெல்லி மரங்கள் நிறைந்து

நெற்று = வாகை மரத்தின் நெற்று

நெறியெல்லாம் = சகல உபாயங்களையும்

நெறு நெறென = இரட்டைக்கிளவி

நென்மெலி = ஒருபடை வீடு

நென்னல் = நேற்று

நேச பாசம் = ஆசாபாசம்

நேத்திரம் = பீலிக்கண்

நேர்ந்து பராவி வைத்தல் = வேண்டி வணங்கி நிற்றல்

நேர்ப்பம் = பிரகிருதி

நேரா = அறுத்துப் போட்டு

நைமி சாரணியம் = வடநாட்டில் நிம்சார் என்னும் இரயில்

நிலையத்திலிருந்து ஒருகல் தொலைவில் உள்ளது

நையாடல் = எண்ணெய் விளையாடல்

நைவளம் = நவிற்று பொழில்

நொக்கென = விரைவாக

நோன்பியர் = சமணர்

பகடு விண்டலறல் = யானை போல் ஒலித்தல்

பகர்தல் = பிரகாசித்தல்

பத்திராகாரன் = விலக்ஷணமான வடிவுடையவன்

பத்து = பக்தி

பத்துடையடியவர்க்கு = பக்தியையுடைய அடியார்களுக்கு

பதக முதலை = துன்பம் தரும் முதலை

பதலைக் கபோதம் = (பதலை – கும்பம், கபோதம் – புறா)

பதவிய = மிருதுவான

பதவியாய் = நீர்மையை உடையவனாய்க் கொண்டு

பதியம் = பாசுரம்

பதிற்றைந் திரட்டி = நூற்றுவரான துரியோனாதிகள்

பதினொரு விடையர் = ஏகாதசருத்திரர்கள்

பந்தனை = அனுக்கம், பிள்ளைக்கு வரும் வியாதி

பந்தார் மெல்விரல் = பந்து பொருந்திய விரலினையுடையவள்

பந்து தூதை = சிறு முட்டி, பூங்குலைகள்

பப்ப = ஒலிக்குறிப்பு

பம்பை = வடபாலை

பயந்தேன் = பசந்தேன்

பயலை = பசலை வர்ணியம், நோய்

பயலோவிலீர் = பாகமுடையீரல்லீர்

பரக்கழித்து = பழிவிளைத்து

பரக்கழிந்தாள் = அடக்கமழிந்தாள், பழிக்கு அஞ்சாளானால்

பரக்கழிந்து = பழியஞ்சாதே, மிகவும் கழிவுமாம்

பரகாலன் = எதிரிகளுக்கு யமன் போன்றவன்

பரங்குன்று = இமயமலைகள் உள்ள திருப்பிரிதி

பரசுராமன் = ஜமதக்னி முனிவருடைய மைந்தன்

பரண்மேல் = மச்சின் மேல்

பரத்தர் = பெருமாள்

பரத நம்பி = பரதாழ்வான்

பரதன் = இராமனின் தம்பி

பரம் = பொறுக்க ஒண்ணுதல்

பரம்பரமாய் = ஒன்றுக்கு ஒன்றுமேலாய்

பரம்புருடன் = உத்தம புருஷன்

பரம்புருடா = புருஷோத்தமனே

பரமசோதி = பரஞ்சோதி

பரமே = வசமோ

பராங்கதி = சிறந்த பதவி

பரிப்பு = பரிவு, துக்கம்

பரிபவம் = அவமானம்

பரிமாற = வியாபரிக்க

பரிமுகமானவன் = ஹயக்ரீவாவதாரமெடுத்தவன்

பரிமேற்கற்கி = கற்கியவதாரம்

பரிதி வட்டத்தூடுபோய் = சூரிய மண்டலத்தின் வழியாகச் சென்று

பரிவேடம் = சந்திரனைச்சுற்றிச் சில காலங்களில் காணப்படும் கோடு

பருங்கிப்பறித்தல் = கொன்று முறித்தல்

பருக்குதல் = பருகச் செய்தல்

பருகுநீர் = குடிக்கின்ற தண்ணீர்

பருச்செவி = பருமனானகாது

பருப்பதம் = மகாமேரு பருவதம்

பல்லவன் = பல்லவ அரசன்

பல்லாண்டிசைத்தல் = மங்களாசாசனம் செய்தல்

பல்லாண்டு திருவோணத்தில் கூறுவித்தல் = மங்களாசாசனம் திருவோண நட்சத்திரத்தில் செய்வித்தல்

பல்வி நுண்பற்றாக = பல்வியானது சுவரிலே இடைவெளியின்றிப் பற்றியிருப்பது போல

பலங்கனி = பலாப்பழம்

பலதேவன் = பலராமன்.

பவர் = பரப்பு .

பவித்திரன் = தூயவன், பரிசுத்தமூர்த்தி

பவத்தர் = பௌத்தர்கள்

பழநடை = முன்பு செய்து போதருங்கிரமம்

பழிகாப்பு = கெட்டபேரைக்காப்பது

பழுக்காய் = பழுத்த பாக்கு

பள்ளிக்குறிப்பு = தூக்கக்குறிப்பு (கொட்டாவி விடுதல் முதலியன)

பள்ளிகமலம் = தாமரைப்பூவாகிறபடுக்கை

பள்ளி கோள் = கோள் முதனிலைதிரிந்த தொழிற்பெயர்

பள்ளியிலோதி வந்த சிறுவன் = பிரகலாதன்

பற்பநாபன் = பத்மநாபன்

பற்பபாதன் = தாமரைமலர் போன்ற மென்மையான பாதங்களையுடையவன்

பற்று மஞ்சள் = நிறம்பிடிக்கும் பூச்சுமஞ்சள்

பற்றையை = பயனற்ற பொருளை

பற = உந்திபற

பறியோலைச் சயனத்தர் = தாழை ஓலைகளினாற் செய்த படுக்கையையுடையவர்

பறை = நோன்புக்கு அங்கமானதொரு வாத்திய விசேடம்

பறை தரும் = புருஷார்த்தத்தைத் தரும்

உத்தானம் = குழந்தையைப் பிரசவ அறையிலிருந்து வெளிக்கொணரும் சடங்கு

பன்னிரண்டு திருவோணம் அட்டேன் = பன்னிரண்டு திருவோணத் திருநாள்ளவும் சமைத்தேன்

பன்னிருதிங்கள் = பன்னிரண்டு மாதம்

பன்னிருநாமம் = திருமாலினுடைய பன்னிரண்டு பெயர்கள் ஒவ்வொரு செய்யுளிலும் வந்துள்ளது

பனுவல் = நூல்

பாக்கியம் = அதிர்ஷ்டம்

பாகுடம் = உபகாரம், பச்சை

பாசனம் = மரக்கலம்

பாசறவு = பசுமையழிவு

பாசிதூர்த்துக்கிடந்த பார்மகள் = பாசி படிந்து கிடந்த பூமிப்பிராட்டி

பாசிலை நாணல் = பசுமையான நாணற்புற்கள்

பாஞ்சசன்னியம் = எம்பெருமான் கையிலுள்ள சங்கு

பாஞ்சாலி = பாஞ்சாலதேசத்து அரசன் மகள்

பாட்டும் முறையும் = இயலும் இசையும்

பாடகம் = பாடகம் என்னும் திருப்பதி

பாடிப்பறை கொண்டு = பிராப்பியத்தைப் பெற்று

பாடுகாவலிடுமின் = அருகுகாவலிடுங்கள்

பாடுசாரா = அருகுவாரா

பாடையிடுதல் = பாடையில் படுக்க வைத்தல்

பாண் = பாட்டு

பாண்டியர் குலபதி = பாண்டிய வம்சத்து அரசன்

பாண்டி வடம் = பிலம்பனைப்பல தேவன் வென்றவிடம்

பாணன் = கடகன், ஆசாரியன்

பாதமத்தாலெண்ணினோன் = பாதமத்தால், பாதத்தால்

பாதமூலம் = திருவடிகள்

பாதுகம் = மரவடி

பாந்தட்பாழியில் = அனந்தாழ்வானாகிற படுக்கை

பாம்புடைப்பல்லவர் கோன் = பாம்பைக் கொடியிலேயுடைய பல்லவ அரசன்

பாமரு = பரப்பையுடைத்தான்

பார்த்த சாரதி = கண்ணன்

பார்த்தன் = அருச்சுனன்

பார்த்தன் பள்ளி = சீகாழியிலிருந்து ஏழுகல் தொலைவில் உள்ளது

பார்மன்னர் = பூமிக்கு அரசர்

பார்மன்னு பல்லவர்கோன் = பூமியில் நெடுங்காலம் வாழ்ந்த பல்லவ அரசன்

பாராசிநாள் = துவாதசி

பாரதங்கையெறிந்தான் = பாரதயுத்தத்தை உறுதிப்படுத்தி வந்தவன்

பாரிசாதாபகரணம் = பாரிஜாத மரத்தைத் தேவலோகத்திலிருந்து கண்ணன் சத்யபாமையின் பொருட்டு அபகரித்து வந்தது

பாரித்த = முயற்சி செய்த

பாரிப்பு = பரப்பு

பாரோர் = உலகத்தவர்கள்

பால்பொன் பசப்புக்கார் = வெண்மை, சிவப்பு, பசுமை, கறுப்பு

பால் சோர = பால் பெருக.

பால்வாய் = பால்மணம் மாறாத வாய்

பாலகன் = உவப்பினால் ஆகிய பால்வழுவமைதி

பாலப்பிராயம் = குழந்தைப்பருவம்

பாலன்றனது துருவாய் = சிறுகுழந்தை வடிவம் கொண்டு

பாலேய்தமிழரிசை காரர் = பால்போன்ற இனிய இயற்றமிழ் அறிவாரும், இசையறிந்து பாடவல்லாரும்

பாலை = பாலைப்பண்

பாவக்காடு = பாவசமூகம்

பாவகாரிகள் = தீயசெயல்களைச் செய்கிறவர்கள்

பாவை = நோன்பு

பாவைக்குச் சாற்றி நீராடுதல் = நோன்புக்கென்று சங்கற்பித்து நீராடுதல்

பாழி = படுக்கை, பரமபதம்

பாழிமை = பெரியமேன்மை, பெருமிடுக்கு

பாளை முத்தும் = பாளையில் உண்டான முத்துக்கள்

பாற்கடல் = திருப்பாற்கடல்

பாற்றுதல் = சிதறவடித்தல்

பாறு பாறாக்கினான் = துண்டு துண்டாகச் செய்தான்

பான் மதிக்கிடர் தீர்த்தவன் = சந்திரனுக்கு க்ஷய ரோகத்தைப் போக்கியவன்

பாளல் = மருதநிலம், கடல்

பிச்சச் சிறுபீலி = மயிலிறகு

பிச்சை = தானம்

பிஞ்சுகள் = உருத்திரன்

பிண்டத்திரள் = பித்ருக்களுக்கு இடும்பிண்ட உருண்டை

பிண்டமாய் = மூலகாரணமாய்

பிண்டியார் = ஜைநர்கள்

பிண்டியுடைநோன்பியர் = அசோகமரத்தைத் தஞ்சமாக உடைய அமணர்

பிணத்தின் மடவார் = பிணங்களைத்தின்கின்ற பெண் பேய்கள்

பிணம்படுத்தல் = சவமாக்கி ஒழித்து அருளல்

பிணா = பெண்பால் பொதுப்பெயர்.

பிதிர் = அதிசயம், மிச்சம்

பிதுவை = தந்தையை

பிரகிருதி = சுபாவம்

பிரமகுரு = பிரம்மோபதேசம் செய்யத்தக்க ஆசாரியன்

பிரமபரம்பரன் = இந்திராதிகளில் ஏற்றமுடைய பிரமாவாகிற பராத்பரன்

பிரமமுதல் வித்தாய் = பிரமமாகிற பிரதான

பிராக்கள் = உபகாரிகள்

பிரிதி = ஒருதலம்

பிலம்பன் = பிரலம்பாசுரன்

பிழக்குடையவசுரர் = தீமைகளைச் செய்கின்ற அசுரர்

பிள்ளைக்குழாம் = பிள்ளைகளின் திரள்

பிளவெடுத்து = கிழித்துப்போகட்ட

பிற்காலும் = மேலும்

பிறப்பிலி = பிறத்தல் இல்லாதவன்

பிறை = ஓரணி பெருமாள்

பிறைதங்கு சடையான் = சிவன்

பின்னை = நப்பின்னை

பின்னைக்கு மணவாளன் = நப்பின்னைப்பிராட்டியின் மணவாளன்

பீர் = வெளுப்பு

பீலிசூடி = மயில் தோகையைச்சூடி

பீலித்தழை = மயில் தோகை

பீளையோடீளை = நேத்திரமலம்

பீற = பிறக்க.

பீனத்தெட்டபழம் = பருத்து நன்றாகப் பழுத்த பலாப்பழங்கள்

புகழ் மங்கை = கீர்த்தியாகிற மங்கை

புகா = உணவு

புட்கவ்வக்கிடத்தல் = பறவைகள் கவ்விக்கொள்ளும்படி கிடத்தல்

புட்குழி = காஞ்சீபுரத்திலிருந்து ஏழுகல் தொலைவில் உள்ளது இருந்த திருக்கோலம்

புட்டியிற் சேறு = இடையில் படிந்த சேறு

புண்ணணி புளிப்பெய்தல் = புண்ணணின் மேல்புளிச்சாற்றைப் பெய்தல்

நாச்சி புணர்ப்பு = படைப்பு, சம்பந்தம், சூழ்ச்சி

புணைவன் = மரக்கலமாயிருப்பன்

புத்து = புத்தர்

புதஞ்செய்தல் = தாவுதல்

புதம் = அம்புதம்

புதமிகு விசம்பு = மேகம்

புதாவினம் = புதா பெருநாரை

புதியதுண்கை = முதல் விளைந்த விளைவை நல்ல வேளையில் சமைத்து உண்ணுதல்

புதுக்கணிப்பு = வடிவிலுண்டான புதுமை

துவிரை = மணம்

புதுவைக்கோன் = ஸ்ரீ வில்லிபுத்தூர்க்குத் தலைவன்

புயக்கற்றது = கைவிட அப்பியஸியா நின்றது

புரந்தரன் = இந்திரன்

புரமெரிய அம்பானது = முப்புரம் அழிய திருமால் அம்பானது

புரவி முகஞ்செய்து = குதிரை முகம் போலத் தலைவணங்கி

புராணர் = பழையவர்

புருடோத்தமன் = திருமால்

புருவ வட்டம் = வட்டமான புருவங்கள்

புரைபுரை = வீடுதோறும்

புல்குதல் = தழுவுகை

புல்லாணி = திருப்புல் அணை என்பதன் சிதைவு. வடமொழியில் தர்ப்பசயனம் என்பர். இப்புண்ணியத் தலம் இராமநாதபுரத்திற்குத் தென்கிழக்கே ஐந்து கல் தொலைவில் உள்ளது. புல்லாரண்ய மகரிஷிக்கும், சமுத்திரராஜனுக்கும் அசுவத்த நாராயணனுக்கும் அருள்பாலித்த இடம்

புல்லெழுந்தொழிதல் = புல் முளைத்து அழிதல்

புலம் = அழகு

புலமங்கை = பூமிப்பிராட்டி

புலரி = விடியற்காலம்

புலவர் = சர்வஞ்ஞர்

புலாகின்ற = மீன் நாற்றம் வீசப்பெற்ற

புலையர் = சண்டாளர்

புழுதிக் காப்பிடுதல் = ஸ்ரீபாததூளியைக் கொண்டு ரட்சை செய்தல்

புள்ளரையன் கோயில் = கண்ணணன் கோயில்

புள் ளு = பறவை

புள் ளுவன் = வஞ்சகம்

புள் ளுவம் பேசுதல் = வஞ்சகமாகப் பேசுதல்

புள்ளைக்கடாகின்றவாற்றை = பெரிய திருவடியை நடத்துகிற விதத்தை

புளிங்குடி = ஸ்ரீவைகுண்டத்திலிருந்து இரண்டு கல்தொலைவில் உள்ளது

புளிப்பழம் = புளிப்புச் சுவையையுடைய ஒருவகைப்பழம்

புளியட்டி = புளிப்பழத்தைக் கொண்டு நீராட்டி

புற்கு = புன்மை

புற்பா முதலா = பரவிய புல்முதலாக

புற்று மறிந்தன = புற்றும் சிதைந்தன

புறக்கிட = புறங்காட்ட

புறம் சுவர்கோலம் செய்தல் = உடலை அலங்கரித்தல்

புறப்பாடின்றி = வெளிப்படுதலில்லாமல்

புறம்புல்குதல் = முதுகைக்கட்டிக்கொள்ளுதல்

புறமலை = திருமலைக்குப்புறம்பான மலை

புன்புலவழி = அற்பமான சப்தாதி விஷயங்களிலே ஐம்பொறிகள் செல்வதற்குரிய வழி

புனக்கொள்காயா = தன்னிடத்திலே நிலையையுடைத்தான காயா

புனிதம் = பரிசுத்தம்

புனிதர் = புனிதரே

புனை = புன்னை

பூகம் = பாக்குமரம்

பூங்கொத்து = மலரின் தொகுதி

பூசல் = போர்

பூணி = பசு

பூணிபேணும் = ஆயன், பசுக்களை மேய்க்கும் இடையன்

பூணிமேய்க்கும் = பசுக்களை மேய்க்கும்

பூதத் திருவடி = பூதத்தாழ்வார்

பூதனை = கம்சனால் கண்ணனைக் கொலை செய்ய ஏவப்பட்ட அரக்கி

பூந்தண் துழாய் = அழகிய குளிர்ச்சி பொருந்திய துளசி

பூந்தண்புனல் = பூவையுடைய குளிர்ந்த நீர்

பூந்தாமம் = அழகிய மாலை

பூநிலாய ஐந்து = பூமியில் உள்ள ஐந்து குணங்கள்

பூம்பாடகம் = காஞ்சிபுரத்திலுள்ள பாண்டவதூதர் சந்நிதி. இக்கோயில் கட்டு வெட்டுக்களில் எம் பெருமான் பெயர் தூதுஹரி என்றுள்ளது

பூம்பாவை = பெரியபிராட்டி

பூமிபாரங்கள் = பூமிக்குச் சுமையான பாவிகள்

பூரண பொற்குடம் = தீர்த்தம் நிறைந்த பொன்னாலான குடம்

பூரிப்ப = பூரணமாக

பூரியர் = நீசர்கள்

பூவியேல் = தள்ளிவிடாதே

பூவை = நாகணவாய்ப்புள்

பெட்டைக்கெடுத்தல் = பொய்ப் பேச்சுக்களைக் கண்டித்து ஒழித்தல்

பெண்டாட்டி = பெண்பிள்ளை

பெண்டுகள் = பெண்கள்

பெண்ணாகி = மோகினியவதாரம் எடுத்து

பெண்ணைத் தென்பால் = பெண்ணையாற்றின் தென்கரையில்

பெண்ணைமேல் அன்றில் = பனைமரத்தின் மேல் அன்றில் பறவை

பெய்தகாவு = உண்டாக்கின சோலை

பெய்தறியா = பெற்றறியாத

பெரிய கோயில் = ஸ்ரீ ரங்கம்

பெருந்தமிழன் = சிறந்த தமிழ்மொழியில் வல்லவன்

பெருந்தேவன் = பரதேவதை

பெருந்தேவி = சீதை

பெருநிலம் = வீடு

பெருப்பெருத்த கண்ணாலங்கள் = மிகவும் விசேஷமான கலியாணங்கள்

பெரும்பாழ் = பிரகிருதி

பெரும்பாழ்க்காலத்து = உலகம் அழிந்து கிடக்கின்ற காலத்து

பெரும்பாழி சூழ்ந்த = பாழி படுக்கை

பெரும் புணர்ப்பு = பெரிய வியாபாரம்

பெரும் புறக்கடல் = இந்த அண்டகோளத்துக்கு அப்பாற்பட்டுச் சுத்த நீராக உள்ள கடல்

பெரும்பொருள் = சிறந்த அர்த்தம்

பெருமக்கள் = பரமசேஷிகள்

பெருவழி நாவற்கனியினும் எளியள் = பெரிய வழியில் விழுந்து கிடக்கின்ற நாவல்கனியினும் இனியள்

பெற்றம் = பசு

பெற்றமாளியை = பசுக்களை ஆளப் பிறந்தவன்

பெற்றார் = தாய் தந்தையார்

பெறுத்தி = பெறச் செய்து

பெறுத்து = உண்டாக்கி

பேச்சும் அலைந்தலையாய் = பொருந்தாத பேச்சையும் உடையவளாய்

பேசுதல் = ஒலித்தல்

பேதுறுவனே = கலங்காநின்றேன்

பேயரே = பைத்தியக்காரர்களே

பேர் = திருப்பேர்

பேரகத்தாய் = திருப்பேர்நகர்

பேரீ்ஞ்ஞாறு = பெயர் ஆயிரம்

பேரெழுதி = திருநாமத்தை எழுதி

பேழ்வாய் = பெரியவாய்

பைங்கூழ்கள் = பசுமையுடைய பயிர்கள்

பைதல் = இளையது

பைதல்காள் = குயிற்பிள்ளைகளே

பொங்கத்தம் பொங்கோ = தோற்றவர் தோல்வியாலே பறையடிக்க ஆடுவது தொரு கூத்து

பொங்கேழ் புகழ்கள் = பொங்கிக் கிளம்புகிற புகழ்கள்

பொட்ட = சடக்கென

பொடியாடி = பஸ்மதாரியான சிவன்

பொத்த = துவாரப்படுத்திய

பொத = துளைத்த

பொதியறை = காற்றோட்டமில்லாத கீழறை

பொதுக்கோ = பொதுக்கென, சடக்கென

பொது நாயகம் = சர்வ நிர்வாககத்துவம்

பொதும்பிடை = பொந்துகளின் நடுவே

பொதும்பு = சோலை

பொய்கைப் பிரான் = பொய்கையாழ்வார்

பொய்ச்சரம் காட்டுதல் = பொய்யாக அஞ்சினவன் போல் நடித்தல்

பொய்ச் சுற்றம் = மனப்பூர்வமாக இன்றி உறவு முறை கொண்டாடுதல்

பொய்க்சூது = க்ருத்ரிமமான சூது

பொய்ந்நிலம் = தரை காண ஒண்ணாத சோறு

பொய்ந்நூலை = பிறமத நூல்களை

பொய்மொழி = பொய்யுரை

பொய்யறைவாய் = கிருத்ரிமமாகச் செய்யப்பட்ட நிலவறை

பொய்யாநா = சத்தியவாதிகள் நாக்கு

பொரி முகந்து அட்ட = நெற்பொரியை எடுத்துச் சேர்க்க, லாஜஹோமம்

பொருட்டாயம் = பொருள் தாயம் பொருட்பங்கு

பொருதவனார் = பொருதவன்

பொருநல் = தாமிரபரணி

பொருநற்சங்கு = திருப்பொருநலில் சங்குகள்

பொலிக பொலிக பொலிக = சாந்தி. சாந்தி. சாந்தி

பொழிலேழும் = ஏழு உலகங்களையும்

பொள்ளை = துளை

பொள்ளை கரத்த போதகம் = துளைக்கையையுடைய கஜேந்திரன்

பொற்சுரிகை = பொன்னால் செய்த உடைவாள்

பொற்றாமரை = குடந்தையில் உள்ள புண்ணிய நீரையுடைய புஷ்கரிணி

பொற்றை = மலைக்கும், யானைகள் பலதிரிகின்ற காட்டுக்கும் பெயர்

பொன் பெயரோன் = இரணியன்

பொன் பெற்றார் = வசிட்டர் முதலிய ஆசிரியர்கள்

பொன்முடியன் = அழகிய திருமுடியையுடையவன்

பொன்மேனி = அழகிய சரீரம்

பொன்வட்டில் = தங்கக்கிண்ணம்

பொன் வயிறு = அழகிய வயிறு

பொன்னன் = இரணியாசுரன்

பொன்னி = காவிரி

பொன்னித் தென்பால் = காவிரியின் தென்கரையில்

பொன்னி நாடன் = காவிரியையுடைய நாட்டுக்குத் தலைவன்

பொன்னூலினன் = அழகிய யக்ஞோபவீதத்தையுடையவன்

பொன்னை = தங்கம்

போக்கு = போக்கிலே

போக மூழ்கி = போகத்திலீடுபட்டு

போகு = போவாய்

போகே என்று = போய்ச்சேர் என்று அறிவித்து

போட்கன் = முறைகேடன், வெட்கம் கெட்டவன்

போத்தந்த = வரவிட்ட

போத = போதுக .

போதர்கண்டாய் = விரைந்து ஓடிவா

போதரேன் = வரமாட்டேன்

போதியார் = பௌத்தர்கள்

போதியும் = அரசமரத்தையும்

போதொடு நீரேந்தி = மலரோடு தீர்த்தத்தையும் எடுத்துக் கொண்டு

போய்ப்பாடுடைய = மிகவும் இடமுடையன, மிகவும் புகழுடையன

போயினாலறையோ = விட்டுப்போக நினைத்தாய் ஆகில்

போர்க்கதவம் = இரட்டைக்கதவு

போரவிடாய் = தந்தருள வேண்டும்

போரவைத்தாய் = மிகவும் இட்டுவைத்தாய்

போருங்கொல் = மீண்டுவருவாளோ

போல் = அசை

போழ்க்கனேன் = முறைகேடனான அடியேன்.

பௌவம் = கடல்

பௌழியன் = ரிக்வேதி

மக்கள் பெறாத மலடன் = பிள்ளை பெறாதவன்

மக்கள் வயது நூறு = மக்களுக்கு வேத சாத்திரப்படி விதிக்கப்பட்ட வயது நூறு

மக்கள் அறுவர் = கண்ணனுக்கு முன் பிறந்த ஆறுபிள்ளைகள்

மகள் பேசுதல் = மணமகளாகச் சொல்லி

மகரக்குழை = சுறாமீனின் வடிவமையச் செய்யப்பட்ட காதணி

மகன்றில்காள் = ஆண் அன்றில்களே (அன்றில் – கிரவுஞ்ச பட்சி)

மகிழ்மாலை = மகிழம்பூமாலை

மங்கைகுலவேந்தன் = திருமங்கை நாட்டுக்குத் தலைவன்

மங்கைதன் பங்கன் = சிவபெருமான்

மங்கையர் கோன் = திருமங்கையாழ்வார்

மங்கை வேந்தன் பரகாலன் = திருமங்கையாழ்வார்

மச்சணி மாடங்கள் = மேல்தளத்தை அலங்காரமாகவுடைய மாடங்கள்

மச்சணி மாடம் = மேல் தளம்

மச்சாவதாரம் = அசுரர் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டு அருளினதும் மச்சாவதாரம்

மச்சொடு மாளிகை = மேல் மாடம்

மசுமையிலி = இலச்சையில்லாதவனே

மஞ்சரி = தோரணம்

மஞ்சளும் மேனியும் = பற்று மஞ்சள் மயமான சரீரம்

மஞ்சனம் = நீராட்டம்

மஞ்சு = மேகம், அழகு, ஆபரணம்

மட்டித்து = வீசி .

மட்டையர் = மொட்டையார்

மடநாகு = இளம்பசு

மடல் = பனை முதலியவற்றின் ஏடு

மடலூர்தல் = தான் விரும்பிய தலைவியை அடைய வேண்டி பனை மடலால் செய்யப்பட்ட குதிரையின் மீது தலைவன் ஏறி ஊர்தல்

மடவார் கேள்வன் = பெண்களுக்கு விரும்பத் தகுந்தவன்

மண்கோட்டுக் கொண்டான் மலை = பூமியைப் கோரப்பல்லின் மீது எடுத்துக் கொண்டு வந்த பெருமானுடைய திருமலை

மண்டை = பிச்சைக்கலம்

மண்டோதரி = இராவணன்

மண்டோதரி காதலன் = இராவணன்

மண்ணரசும் வேண்டேன் = இப்பூமியை அரசாளும் ஆட்சியை யான் விரும்ப மாட்டேன்

மண்ணி = மண்ணியாறு

மண்ணியின் தென்பால் = மண்ணியாற்றின் தென்கரை

மண்ணை = ஒரு படைவீடு, ஒரு நதி சிற்றூறு போல

மண்மதியிற் கொண்டுகந்தான் = பூமியை தனது புத்தி சாமர்த்தியத்தினால் மாவலியிடம் பெற்று உவந்தான்

மணத்தூண் = திருமணத்தூண். அழகிய மணவாளன் சந்நிதியில் கர்ப்பகிரகத்திற்குப் பக்கத்திலிருக்கும் இரண்டு தூண்களுக்குத் "திருமணத் தூண்" என்று பெயர். வடமொழியில் ஆமோதஸ்தம்பம் என்று வழங்கும்.

மணவாளீர் = மணவாளப் பிள்ளாய்

மணாட்டுப் புறம் = திருமணமுறை

மணிக்கதவம் = அழகிய கதவு

மணி மாடம் = திரு நறையூர்

மணிமேகலை = நவமணிகள் பதித்த அரைஞாண்

மணி வயிறு = அழகிய வயிறு

மணை நீராட்டி = கட்டை (பெற்ற தாயிருக்க மணை வெந்நீராட்டுதிரோ)

மத்தகம் = சிரம்

மத்தணி = வாச்சியம்

மத்த மலர் = மதமத்தம்பூ

மத்தளி = வாத்திய வகை

மதலைத் தலை = தூண் மேலுள்ள சிறு தூண்

மதிக் கண்டாய் = புத்தி பண்ணிகிடாய்

மதி கோள் விடுத்தல் = சந்திரனுடைய துன்பத்தைப் போக்கி அருளுதல்

மதிகோள் விடுத்து = க்ஷயம்

மதுகரம் = வண்டு

மது கைடவர்கள் = திருமாலின் நாபிகமலத்தில் இரண்டு நீர்த்துளிகள் இருந்தன. அவற்றைத் திருமால் நோக்க இரண்டு அசுரர்கள் ஆயினர். இவர்கள் ஹயக்ரீவரால் கொல்லப்பட்டனர்

மதுசூதன் = திருமால்

மதுரையார் மன்னன் = கண்ணன்

மந்தக் கோவை = செவ்வியழியாத தொடையல்

மந்த முழவு ஓசை = வாத்தியங்களின் மந்தமான ஓசையை

மந்திரக் கோடியுடுத்தி = நிச்சயதார்த்தச் சீலையை அணிவித்து

மந்திரப் படுதல் = மந்திரத்தால் கட்டுப்படுதல்

மயக்கு = மயக்கத்தைச் செய்யும் பொருட்கள்

மயர்வறுத்தேனே = அஞ்ஞானத்தை அறுத்தேன்

மயிர்க் கூச்சு = புளகம்

மயிரும் முடி கூடிற்றில் = மயிரும் சேர்த்து முடிக்கும்படி கூடவில்லை

மரக்காற் கூத்து = மரத்தைக் காலிலே கட்டிக் கொண்டு ஆடுவதொரு கூத்து

மரங்கள் போல் வலிய வஞ்ச நெஞ்சனேன் = மரங்களைப் போலக் கடினமான நெஞ்சையுடையனாய் வஞ்சனையே தொழிலாகவுடையவனாம்

மரவடியைத் தம்பிக்கு = பாதுகைகளைப் பரதனுக்குக் கொடுத்து

மருத்துவப் பதம் = வைத்தியம் செய்யும் மருந்தின் பக்குவம்

மருத்துவன் சுடினும் = வைத்தியன் சூடு போட்டாலும்

மருதஞ் சாய்த்தது = இரட்டை மருதமரங்களை முறித்துத் தள்ளினது

மருதர் = மருத கணங்களான நாற்பத்தொன்பதின்மர்

மருதரும் வசுக்களும் = மருத்கணங்கள் ஒன்பதின்மரும் அட்டவசுக்களும்

மருந்தும் = மருந்து

மருமகன் சந்ததியை உயிர்மீட்டது = அபிமன்யுவினுடைய புத்திரனான பரிக்ஷித்தை மறுபடியும் பிழைப்பித்தது

மருவலர் = பகைவர்

மருள் பாடுதல் = மயங்கும்படி ஒருவகைப் பாட்டைப் பாடுதல்

மல்லிகை வெண் சங்கூதும் = மல்லிகைப் பூவாகிய வெண்மையான சங்கை ஊதும்

மல்லி நாடி = திருமல்லி நாட்டை ஆண்டவள்

மல்லை = திருக்கடல் மல்லை

மல்லைச் செல்வம் = தனக்கு மேலில்லாத செல்வம்

மல்லை மாநகர் = செல்வம் நிறைந்த பெரிய நகரமாகிய வடமதுரை

மல்லை மா முந்நீர் = செல்வம் நிறைந்த பெரிய கடல்

மல்லையர்கோன் = மல்லாபுரி என்னும் திருக்கடல் மல்லையுள்ளார்க்குத் தலைவன்

மலக்க மெய்த = கலங்கும்படி

மலக்கு நாவுடையேற்கு = மிகு களிப்பாலே சுழலப் பண்ணுகிற

மலங்க = அழிய

மலடன் = மகப் பெறாதவன்

மலரெட்டுமிட்டு = கருமுகை, கற்பகம், சௌகந்தி, செங்கழுநீர், தாமரை, கைதை

மலினம் = தோஷம், குற்றம்

மலைத்த = தகையப்பட்ட

மலைப் பண்டம் = மலையில் விளையக் கூடிய பல பொருள்

மலையரசன் = மலையமான்

மலையில் மிளிர்ந்து மின்னும் = பெரிய மலையின் கொடுமுடியில் விளங்குகின்ற

மலையேழும் = சப்தகுலாசலம்.

மழலை = இளமை.

மழறு = இனிமை

மழுவாளி = சிவபிரான், பரசுராமன்

மழுவேந்தி = பரசுராமன்

மழைக் கண்ணி = நீர்த்தாரைகள் பெருகப்பெற்ற கண்களையுடையவள்

மழையே மழையே = ஓ மேகமே

மற்கடம் = குரங்கு

மற்றிண்டோண் = மல்யுத்தத்தில் வலிமையான, தோள்கள்

மறந்த காலத்தும் = மழை பெய்யாமல் போனாலும்

மறியோடுதல் = கன்றுகளைத் திருப்புவதற்காக முன்னே ஓடுதல்

மறுக்கம் = மனக்கலக்கம்

மறுக்கேலே = கலங்கப் பண்ணாதே

மறுகாலின்றி = மறுதரமின்றியே

மறையாளன் = அந்தணன்

மறைவலார் = வேதத்தை நன்கு கற்றவர்கள்

மறை வாணர்கள் = அந்தணர்கள்

மன்றாடிகள் = இரந்து கேட்டல்

மன்றில் = நாற்சந்தி

மன்றில் தூற்றல் = வெளியில் அயலாரை விட்டுத் தூற்றுதல்

மன்றிலார புகழ் மங்கை = நாற்சந்தியிலும் பரவிய புகழையுடைய வரும் திருமங்கை நாட்டையுடையவர்

மன்றில் குரவை = நாற்சந்தியில் கைகோத்துக் குரவை கூத்தாடுதல்

மன்று = வெளிநிலம்

மன்று = நாங்கூர்ச் செம்பொன் கோயில்

மன்னர் குருதி கொண்டு = அரசர்களின் இரத்தத்தாலே

மனக் குற்ற மாந்தர் = கெட்ட இதயத்தையுடைய மனிதர்

மனப் பரிப்பு = மனத்துயர்

மனிசப் பிறவி = மானிடப்பிறவி

மனிசர் = மனிதர்

மனிசர்க்கா = மனிதர்க்காக

மனு குலத்தார் = மநு வம்சத்தில் பிறந்த அரசர்கள்

மாக்கோல் = குதிரையை நடத்துகிற கோல்

மாகம் = பெரிய ஆகாயம்

மாகாயமாய் நின்றமால் = திரிவிக்கிரமனாய் நின்ற திருமால்

மாசதிரிது பெற்று = மா சதிர் இது

மாசுடம்பின் வல்லமணர் = அழுக்குப் படிந்த உடம்பையுடையவராய் வலிய வந்து வாது செய்பவர்களான சைனர்கள்

மாசூணாதோ = அழுக்கடையாதோ

மாசூணும் = அழுக்கடையச் செய்யும்

மாடக் கவாடம் = சந்நிதியின் திருக்காப்பு

மாடக் கோயில் = மேட்டிடத்தில் குறுகிய வழியுள்ளதாகக் கோச்செங்கணான் கட்டிய கோயில்

மாடத்துச்சி மிசைச் சூலம் = மாளிகைகளின் முடிமேலே இருக்கிற சூலங்கள்

மாட நெற்றி = மாளிகைகளின் முகங்கள்

மாடு = செல்வம்

மாண் = அழகு, மாணி

மாணிக்கப் பண்டாரம் = மாணிக்க நிதி போல் இனியவன்

மாணிக்க மொட்டு = இந்திர நீலமயமான அரும்பு

மாணுருவாய் = வாமன ரூபி

மாத்தடுப்ப = பசுக்களை வெளியே போகாதபடி தடுப்ப

மாத்தமர் பாகன் = யானைப்பாகன்

மாதர்க்காய் = சத்தியபாமைக்காக

மாதாபிது = தாய் தந்தை

மாதாவினைப் பிதுவை = தாய் போன்றவனும், தந்தை போன்றவனும்

மாதுளம் பூ = அணிவகை

மாந்தேர் = மாத்தேர்

மாமணி மண்டபம் = மாணிக்க மண்டபம்

மா மருந்தம் = மருந்து

மாமழை மொக்குள் = பெருமழைக் குமிழி

மாமான் மகளே = அம்மான் பெண்ணே

மாமீர் = அம்மாமீர்

மாமை = நிறம்

மாயக்கவி = கிருத்திரிமக் கவி

மாய வலவை = கபடியான கட்டுவிச்சி

மாயிருஞ்சோலை = திருமாலிருஞ்சோலை மலை

மார்க்கண்டன் = மிருகண்டு முனிவரின் புத்திரன்

மார்வனை ஆர்வத்தால் மார்வம் = மார்பு

மாரதர் = பெரிய தேர் வீரர்

மாரன் = மன்மதன்

மாருதி = அனுமன்

மாலபாதம் = எம்பெருமானுடைய திருவடிகள்

மாலவன் = கரியன்

மாலி = மாலி என்னும் அரக்கன்

மாலிமான் = சுமாலி

மாவலவன் = ஆடலமாவென்னும் குதிரையையுடைய திருமங்கை மன்னன்

மாவலி = அசுரசக்கரவர்த்தி, பிரகலாதன் பேரன்

மாழாந்து = ஒளிமழுங்கி

மாற்றாண்மை = பகைத் தன்மையை யாளுகை

மாற்றரசர் = பகைவரான துரியோதனன் முதலிய அரசர்கள்

மாற்றி = பிரதி உபகாரத்தை விரும்பாமல் உதவி செய்தல்

மாற்றிலிசோறிடுதல் = உதவியை எதிர்பார்க்காமல் விருந்தினர்களுக்கு அன்னம் அளித்தல்

மாற்றுத்தாய் = சுமித்திரை

மாறன் = நம்மாழ்வார்

மாறன் பசுந்தமிழ் = நம்மாழ்வார் அருளிச் செய்த மொழி

மாறன் பணித்த மறை = நம்மாழ்வார் அருளிய தமிழ் வேதம்

மாறனடி பணிந்துய்ந்தவன் = நம்மாழ்வாருடைய திருவடிகளைப் பணிந்து உஜ்ஜீவித்த

மான் கொண்ட தோல் = கிருஷ்ணாஜினம்

மானம் = பெருமை

மானவேற் கலியன் = சிறந்த வேற்படையையுடைய திருமங்கை மன்னன்

மானிடம் பாடல் என்னாவது = மனிதர்களைப் பாடுதலால் என்ன பயன்

மானிடம் பாடேன் = மனிதர்களைப் பாடமாட்டேன்.

மிடுக்கு = சக்தி

மிண்டர் = மூர்க்கர்

மிண்டுதல் = செறிதல்

மிலைக்க = கனைக்க

மிழற்றுதல் = இன்சொல் கூறல், சேஷ்டிதங்களைச் செய்தல்

மிளிர்ந்து = பாய்ந்து

மிளை = சிறுபுதல்

மிறை = மிடுக்குக்கள்

மிறைத்து = மேனாணித்து

மினுங்கநின்று = விளங்கும்படி நின்று

மீட்சி = திரும்பி வருதல்

மீதியன் = மேற்பட்டவன்

மீமீதாடாவுலகத்து = மேலே செல்லாத உலகத்தில்

முக்கட்பிரான் = சிவபெருமான்

முக்கணம்மான் = சிவபெருமான்

முக்கி = பெரிதும் வருந்தி

முகத்துச் சுட்டி = சுட்டி, நெற்றியணி

முகப்படாயென்னும் = எதிர்ப்படாதிருக்கிறாய்

முகப்பு = முன்பு

முகப்பே = முன்னே

முகப்பே கூவி = சந்நிதி. திருவாய். .

முசுக்கணங்கள் = முசு என்ற சாதிக் குரங்குகளின் கூட்டங்கள்

முடித்தன்றே = நிறைவேற்றிக் கொண்டது அன்றே

முடிவட்டம் = திருவபிஷேகம்

முண்டம் = சுபாவம்

முண்டர் = சைவர்

முத்கலன் = ஒரு புண்ணிய புருஷன்

முத்தப்பன் = முத்துப் பால் போக்கியன்

முத்தம் = அதரம்

முத்தி வளர்த்து = மோந்து

முத்திறத்து நீர் = கடல்

முத்திறத்து வாணியத்து = சாத்விக, ராஜஸ, தாமசங்களான பலன்கள்

முத்தின் குப்பாயம் = முத்தினாலான போர்வை

முத்தின் கோடாலம் = முத்தாலே தொடுக்கப்பெற்ற வளைவான மாலை (ஆரம் – ஆலம்)

முத்தீயர் = கார்கபத்தியம், ஆகவனீயம், தக்கிணாக்நிகளையுடையவர்

முத்தீ நான்மறை = முத்தீ – கார்கபத்தியம், ஆகவனீயம், தக்கணாக்கிநி, நான்மறை – ருக், யசுஸ், சாமம், அதர்வணம்

முத்தோ = சந்தோஷமோ

முதல் = பாக்கியம்

முதலையின் பல்விடம் = முதலையினுடைய பல் விஷம்

முதுகத்திடை = முதுகின் மேல்

முதுகயம் = கடல்

முது புணர்ப்பு = பழைய நிலைமை

முந்நீர் ஞாலம் = ஆற்றுநீர், ஊற்று நீர், மழை நீர்

முந்தை = முற்பட்டவர்

முப்பத்து முவரமரர் = முப்பத்து முக்கோடி தேவர்

முப்புரி நூல் = பூணூல்

மும்மதப்புனல் = இருகபோலமும் மேட்ரமுமாகிற மூன்றினின்றும் வடியும் மத ஜலம்

மும்மூர்த்தியுருவானவர் = திருமால்

முயற்றி = உற்சாகம்

முயற்றியவாய் = முயற்சியையுடையவாய்

முரன் = நரகாசுரன் மந்திரி

முரி சுரியேறு = பெரிய சுழித்தலையுடைய

முல்லைப் பிராட்டி = முல்லைக் கொடி, பெண்பிள்ளை

முழுவி = முத்தம்

முழு சிவண்டாடிய துழாய் = வண்டு முழுசி ஆடிய துழாய், வண்டுகள் தேனிலே முழுகிக் கூத்தாடிய துளசி

முழுகுதல் = முழுகுதல்

முழுவுதல் = முத்தமிடுதல்

முள் முளரிக் கூடு = தாமரைத் தண்டால் செய்த கூடு

முள்ளிச் செழுமலரோர் தாரான் = திருமங்கையாழ்வார்

முளரிக் குரம்பை = தாமரையிலைகளையும், பூக்களையும் கொண்டு வந்த செய்த கூடு

முளரிக் கூட்டகம் = தாமரைப் பூவாலும், தண்டினாலும் செய்யப்பட்ட கூடு

முளிந்தீந்த வெங்கடம் = உலர்ந்து தீய்ந்து போன கொடிய பாலைவனம்

முளையட்டி = திருமணத்தின் அங்கமாக நவதானியங்களைக் கொண்டு பாலிகை வைத்தல்

முற்கலன் = ஓரடியான். விஷ்ணு தர்மத்தில் கண்டது இந்த உபாக்கியானம்

முற்றமூத்து = மிகவும் கிழத்தனத்தை அடைந்து

முற்றல் யானை = குவலயாபீடம் என்னும் யானை

முற்றாவுருவாகி = முதிராத வடிவையுடையையாகி

முற்றில் = சிறு முறம்

முற்றும் = முற்றுதும் என்பதன் குறுக்கள். தன்மைப் பன்மை வினைமுற்று

முன்றிற் பெண்ணை = வாயில்

முன்னல் = முன்னர்

முன்னுரை = பாரதம்

முனி = திருமால்

முனைவன் = முக்கியமானவன், தலைவன்

மூக்கின்று = மூக்கின்றது

மூக்குறிஞ்சி = மூக்கை உறிஞ்சிக் கொண்டு

மூடநெய் = பால்சோறு மறையும்படி நெய் ஊற்றி

மூத்தவை = பெரிய அவை

மூத்திரப் பிள்ளை = அசுத்தனான பிள்ளை

மூதறியும் அம்மனைமார் = பழம் பாடல்கள் தெரிந்த பாட்டிமார்கள்

மூதுரை = பழமொழி

மூதுவர் = முற்பட்டவர்

மூரி = மிடுக்கு

மூலமாகிய ஒற்றையெழுத்து = ஓம் என்ற பிரணவம்

மூவாயிர நான்மறையாளர் = தில்லை வாழ் அந்தணர்கள்

மூவுருவும் = அரி, அயன், அரன்

மூவெழுகால் = இருபத்தோரு படிகள்

மூழ்க்கச்சூழ்ந்து = அறிவையழுத்த

மூழ்த்த நாள் = பிரளய காலம்

மூழை = அகப்பை

மூன்று தண்டர் = துறவிகள்

மூன்றெழுத்துடைய பேர் = கோவிந்தன் என்ற பெயர்

மூன்றேழுத்துள்ள மந்திரங்கள் = ஓம் என்னும் விரணம்

மெச்ச ஊது = மெச்சூது

மெத்தை = படுக்கை

மெய்ஞ்ஞானம் = தத்துவ அறிவு

மெய்த்தன் = மெய்யே

மெய் நாவன் = உண்மை ை ம பேசுபவன்

மெய்ப்பிணக்கிடுதல் = உடல் சேர்க்கை செய்தல்

மெய்யடியார்கள் = உண்மையான அன்பையுடைய பாகவதர்கள்

மெய்யடியான் = உண்மையான தொண்டு செய்பவன்

மெய்யம் = இத்திருப்பதி திருமயம் இரயில் நிலையத்திலிருந்து அரைகல் தொலைவில் உள்ள பூசித்துப் பேறு பெற்றோர் சத்திய தேவதையும் அனந்தனும்

மெய்யமலையாளன் = மெய்யமலையை இருப்பிடமாகக் கொண்டவன்

மேகக் குழாங்கள் = மேகக் கூட்டங்கள்

மேகின்ற = விரும்பித தழுவுகின்ற

மேகின்றாய் = மேவி நின்றாய்

மேம் பொருள் = ஜனங்கள் விரும்புகின்ற பொருள் (லௌகிக பதார்த்தங்கள்)

மேய்க்கிய = மேய்க்க

மேய்க்கின்று = மேய்க்கும் பொழுது

மேல் தோன்றி = செங்காந்தள்

மேலாப்பு = விதானம், மேற்கட்டி

மேலெழுந்ததோர் வாயு = ஊர்த்துவ உச்சுவாசம் (மேல் மூச்சுக் காற்று)

மேலெழப் பாய்ந்திட்டு = காளியன் என்னும் பாம்பின் தலை மீது நின்று

மேலையகம் = யசோதையின் வீட்டிற்கு மேலண்டை வீடு

மேற்கிளைக் கொண்டிருமி = மேலான த்வனியோடு இருமல் மேலிட்டு

மேன்மக்கள் = நித்திய சூரிகள்

மேனகை = தேவலோகத்து மகளிருள் ஒருத்தி

மேனிக்குப் பூசுஞ் சாந்து = திருமேனிக்குப் பூசத் தகுந்த பரிமள திரவியம்

மைத்த சோதி = மையின் தன்மைவாய்ந்த ஒளி

மைத்துனன்மார் = அத்தை பிள்ளைகள்

மைதிலி = சீதை

மைந்தன் = கண்ணன்

மைப்படி = கரிய திருமேனி

மையன்மை = மயக்கம்

மையாக்கும் = மோகியர் நிற்பாள்

மொக்குள் = மொக்கல், நீர்க்குமிழி

மொட்டு = அரும்பு

மொய்குழல் = நெருங்கிய கூந்தல்

மொய்ம்பு = வலிமை

மோக்கம் = மோட்சம்

மோடி = காளி

மோடு பருப்பார் = வயிறு பருப்பவர்கள்

மோய் = தாய்

மோழை = குமிழி, நீர்ப்பெருக்கு, கீழாறு, துவாரம்

மௌவல் = மல்லிகையில் ஒருவகை

யமுனைத்துறைவன் = ஆள வந்தார்

யவர் = எவர்

யவரும் = எல்லாச் சேதனரும்

யாய் = தாய்

யார் முகப்பும் = எல்லார் முன்பும்

யாவகையுலகம் = எவ்வகைப்பட்ட உலகம்.

யோகம் = மருந்து, கண்ணுணுக்கு விஷயமாகிய வஸ்து

யோகு செய்தல் = உலகைக் காப்பாற்ற உபாயஞ் செய்தல்

வக்கரன் வாய் முன் கீண்ட = தந்தவக்ரனுடைய வாயைக் கிழித்த

வகுக்கின்று = வகுப்பதாயிருக்க

வங்கக் கடல் = கப்பல்களையுடைய திருப்பாற்கடல்

வங்கத்தின் கூம்பேறு பறவை = கப்பற்காகம்

வசவு = நிந்தனை

வசிட்டன் = இக்குவாகு வம்சத்துப் புரோகிதர்

வசுக்கள் = அஷ்ட வசுக்கள்

வசுதேவர் = இவர் சூரசேனன் என்பவனுடைய புதல்வர். இவரது மனைவி பெயர் தேவகி. திருமால் இவருக்கு மகனாகத் தோன்றினார்

வட்கு = லஜ்ஜை

வட தடம் = வடக்குத்திக்கிலுள்ள திருப்பாற்கடல்

வடபுலக் கோன் = வடநாட்டு அரசன்

வட மரத்திலை மேல் பள்ளி = ஆலமரத்தின் இலைமேல் பள்ளி கொண்டவன்

வட மலை = திருவேங்கட மலை

வண்டமிழ் = அழகிய தமிழ்

வண்டமிழ் நூல் = திருவாய் மொழி

வண்டமிழ் மாமுனி = அகத்தியர்

வணங்கேனேலும் = வணங்கேனாயினும்

வதரி = பதரி என்ற வடசொல் வதரி என்று திரிந்தது. பதரி – இலந்தை. இத்திருப்பதி இமயமலையிலுள்ளது

வதுவை = மணம்

வதை செய்தல் = கொலை செய்தல்

வந்திக்கு மற்றவர் = பலாத்காரமாக அபகரிக்க

வந்தி பற்றும் வழக்கு = வருத்தி அபகரித்துக் கொண்ட நியாயம்

வந்தீயாய் = வந்து கண்களுக்கு உன்னைக் காட்டியருள வேணும்

வம்பர் = புதியர்

வயிச்சிரவணன் = குபேரன்

வயிரக்கடி பிட்டு = வச்சிரகுண்டல மணிந்து

வயிரமேகன் = ஓரரசன்

வயிர வழக்கு = சத்துருத்வ முறை

வயிற்றினகம் படியில் = திருவயிற்றின் உட்புறத்தில்

வயிற்றிற்றொழுவைப் பிரித்து = கர்ப்ப வாசத்தைக் கழித்து

வயிறசைதல் = வயிறு தளர்தல்

வயிறடித்தல் = வயிற்றில் மோதிக் கொள்ளுதல்

வயிறு மறுக்குதல் = வயிற்றைக் கலக்குதல்

வரகுண மங்கை = ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து 1 1/2 கல் தொலைவில் உள்ளது. அக்னி தேவனுக்கு அருள புரிந்தவன்

வரண்ட = தள்ளப் பெற்ற

வராகவதாரம் = திருமால் காட்டுப்பன்றி வடிவம் எடுத்து நீரிலே மூழ்கியிருந்த நிலமகளை வெளியில் கொண்டு வந்தார்

வருத்தித்தல் = சிருஷ்டித்தல்

வருமை = பரலோகம், மறுமை

வல்லரட்டன் = பெருமிடுக்கன்

வல்லவாழ் = திருவல்லா என வழங்கும் திருப்பதி கொட்டாரக்கராவிலிருந்து 36 கல் தொலைவில் உள்ளது

வல்லாளன் = கருடன்

வலவை = பிறர் ஏற்றுக் கொள்ளும்படி பேசுபவன்

வலி செய்ய = பீடிக்க

வலிப்படுதல் = பலாத்காரத்திற்கு உட்படுதல்

வழுவிலாவடிமை = குற்றமில்லாத அடிமை

வள்ளி = கொடி

வள்ளி கொழுநன் = முருகன்

வள்ளி நுண் மருங்குல் = கொடி போன்று நுட்பமான இடை

வளர்ந்தவன் = கண் வளர்ந்தவன்

வளைவண்ணன் = பலராமன்

வற்பு = வலி

வன மாலை = திருத்துழாய் மாலை, காட்டிலே பூப்பறித்துக் கட்டிய மாலை

வளாய்க் கொள்ள = சூழ்ந்து கொள்ள

வளை கொண்ட வண்ணத்தன் = சங்கு போல வெண்மையான நிறத்தையுடையவன்

வளைத்து வைத்தேன் = தடையிட்டு

வாகை நெற்று = வாகை மரங்களின் நெற்றுக்களானவை

வாசிகை = முத்து மாலை

வாசி வல்லீர் = தாரதம்மியம் அறிய வல்லீர், வேறுபாடு அறியவல்லீர்

வாட்டாறு = திருவனந்தபுரத்திலிருந்து 28 கல் தொலைவில் உள்ளது. இத்திருப்பதி வாட்டாறு என்னும் நதியால் பெயர் பெற்றது

வாணபுரம் = வாணாசுரனுடைய நகரம்

வாணன் = பலியின் குமரன். இவனது நகரம் சோணிதபுரம். கம்சனுக்கு நண்பன். இவனுடைய மகள் உஷை. இவன் பூசித்த லிங்கம்பாணலிங்கம்.

வாணன் மகள் = உஷை

வாணாள் = வாழ்நாள் என்பது வாணாள் என மருவிற்று

வாணிபம் = பயன்

வாத மா மகன் = அனுமன்

வாதித்தல் = பாதித்தல்.

வாதிப்புண் = துன்பமடைந்த

வாதை = பாதை துன்பம்

வாமனன் = காசியபருக்கு அதிதியிடம் அவதரித்தவர். விஷ்ணுவின் ஐந்தாவது அவதாரம், இவர் மாவலியின் செருக்கடக்க மூவடி மண் வேண்டினார்

வாமான்றேர்ப் பரகாலன் தாவுதலையுடைய குதிரைகள் பூட்டிய தேரையுடைய திருமங்கையாழ்வார்

வாய்க் கோட்டம் = வாக்கின் அநீதி

வாய் கொண்டு மானிடம் பாடுதல் = வாக்கைக் கொண்டு மனிதரைப் பாடுதல்

வாய்த்த நன்மக்கள் = சிறந்த சீடர்கள்

வாய் நேர்ந்து = கொடுப்பதாக விண்ணப்பித்து

வாயுறை = அறுகம்புல்

வாரமாக ஓதுதல் = திருவஷ்டாக்ஷரத்தை அன்புடன் சொல்லுதல்

வாராகம் = பன்றி

வாலாட்டுதல் = செருக்கான செய்கை, அஹங்காரம்

வாலி = இந்திரன் குமாரன். இவன் தம்பி சுக்ரீவன். நாள் தோறும் எண்திசைக்கடலிலும் தீர்த்தமாடிச் சிவபூசை செய்பவன்

வாலிதன்றன் = வாலியின் தம்பியான சுக்கிரீவன்

வாலோலை கட்டி = வாலிலே ஓலையைக் கட்டி

வாளி = அணிவகை

வானமாமலை = நாங்கு நேரியில் கோயில் கொண்டுள்ள பெருமாள். பரமபதத்திலே பெரிய மலைபோல வீற்றிருக்கும் திருமால்

வானரக்கோன் = வாலி

வானவர்கோன் பாழி = திருமாலின் இருப்பிடமான பரமபதம்

வானவர் தமக்கு = தேவர்களுக்கு

வானிளவரசு = பரமபத இளவரசு

விக்கிரமம் = வீரச்செயல்

விகிர்தம் = ஒரு படித்தல்லாது வேறுபட்ட செயல்

விகிர்தமாதர் = வேறுபட்ட ஸ்திரீகள்

விச்சாதரர் = வித்யாதரர்கள்

விச்சைக்கிறை = சர்வஞ்ஞன். சமணர்கள் சர்வஞ்ஞர் என்று ஒரு தெய்வமே கல்விக்குக் கடல் என்று பணிவார்கள்

விசாதி = வியாதி

விசித்திரப்படுதல் = அமைத்தல்

விசித்திரம் = அழகு

விசும்பிலார் = பிரமன் முதலியோர்

விசுவாமித்திரர் = காதியின் புத்திரர். ரிக் வேதத்தின் மூன்றாவது கண்டத்தில் அடங்கியிருக்கின்ற கீதங்களுக்கெல்லாம் கர்த்தா

விட்டு = விஷ்ணு

விட்டு சித்தன் = கருடாம்சம். புரச்சூடவைணவருடைய மகனார். கோதையின் வளர்ப்புத் தந்தை

விடத்தேள் எறிதல் = விஷத்தையுடைய தேள் கொட்டுதல்

விடமங்கள் = வைஷம்யங்கள். நேர்மையான காரணமில்லாமல் வேறுபடுத்துதல்

விடிவை சங்கொலிக்கும் = காலையில் சங்கு முழங்கும்

விடைக்கொடி = பாம்புக் கொடியோன். பல்லவன் நாகலோகம் சென்று வந்ததன் காரணமாக "பாம்புக் கொடியோன்" என்றும் வரலாறு உள்ளது

விடைச்செறுமணியோசை = எருதின் க்ருரமான மணி ஓசை

விடைமணிக்குரல் = எருதுகளின் கழுத்தில் கட்டியுள்ள மணிகளின் ஓசை

விடையான் = சிவன்

விண்களகத்திமையவர் = பரமபதத்தில் உள்ள நித்திய சூரிகள்

விண்ட = குன்று

விண்ணகர் = பரமபதம்

விண்ணகரம் = ஒப்பிலியப்பன் சந்நிதி

விண்ணப்பம் = வேண்டுகோள்

விண்ணணி = வெண்ணணி

விண்மிசை = பரமாகாசம்

வித்துவக்கோடு = பட்டாம்பி இரயில் நிலையத்திலிருந்து ஒருகல் தொலைவில் உள்ளது.

விதலைத் தலை = நடுங்கிக் கிடந்த சமயம்

விதி = பாக்கியம்

விதிர் விதிர்த்து = உடம்பு நடுங்கி

விதிவாய்க்கின்று = பகவானுடைய தயை கிட்டுமிடத்து

விந்தமேய கன்னி = விந்திய மலையில் வீற்றிருக்கின்ற துர்க்கை

விபரீதம் = பிரதி கூலம்

விபீடணன் = விச்சிரவசு முனிவரின் மகன். இராவணன் தம்பி. அயோத்தியிலிருந்து திரும்பும் போது ஸ்ரீரங்கத்தில் திருமாலைப் பிரதிட்டை செய்தான்

வியவு = வேறுபாடு

வியாழம் = பிரகஸ்பதி

வியூகம் = படைவகுப்பு

விராது = விராதன்

விருத்தம் = கூட்டம்

விருந்தாவனம் = துளசி வனம். யமுனைக்கரையில் கண்ணன் இளமையில் விளையாடிய காடு

வில்லவன் = வில்லவன் என் பகை அரசன்

வில்லார் மலி வேங்கடம் = வேடர்கள் நிறைந்த திருவேங்கடம்

வில்லார் விழவு = கம்சன் செய்த தநுர்யாகம்

வில்லி புதுவை நகர் = ஸ்ரீவில்லி புத்தூர்

வில்லி புத்தூர் கோன் = பெரியாழ்வார்

விலங்கு நூலர் = பூணூலைத் தரித்தவர்

விலாவறச் சிரித்திடுதல் = அளவு கடந்து சிரித்தல்

விலைக்காட்படுதல் = வயிற்றுப் பிழைப்புக்காகப் பிறர்க்கு அடிமைப்படுதல்

விலையாள் = அடியவள் (வேலைக்காரி)

விழலுகுத்தல் = விசுவாமித்திரத்தைக் கயிறாகத் திரித்துக் கட்டுதல்

விழிக்குங் கண்ணிலேன் = உன்னைத் தவிர வேறு ஒருவரையும் ரக்ஷகமாக மதிக்கவில்லை

விள்கை விள்ளாமை = விட்டுப் போதல், விடாது ஒழிதல்

விளங்கனி = கபித்தாசுரன்

விளரிக்குரல் = விளரி என்னும் இசைக்குரல். விளரி என்பதற்கு மத்யமஸ்வரம் என்று பொருள் கொள்ளலாம்

விளிந்தீய்ந்த மாமரம் – தள்ளப்பட்டுக் கெட்டுப்போன பெரிய மரம்

விளையாட்டம் = விளையாடுதல்

விற்பெருவிழவு = தநுர்யாகம் என்ற சிறந்த உற்சவம்

வினதைச் சிறுவன் = கருடன்

வினவப்பெறுதல் = ஆராய்தல்

வினையாட்டியேன் = பாவத்தையுடையேன்

வீடுதரும் = மோட்சத்தைத் தரும்

வீதியார வருவானை = தெரு நிறைந்து வருகின்ற கண்ணனை

வீரணி தொல்புகழ் = வீரத்தை ஆபரணமாக உடையவரும், நிலையான புகழை உடையவருமான பெரியாழ்வார்

வீழ்ச்சி = விழுந்து

வெஃகணைக் கிடந்தது = திருவெஃகா என்னும் திருப்பதியில் சயனத்திருக்கோலம்

வெஃகா = காஞ்சிபுரத்திலிருந்து இரண்டு கல் தொலைவில் உள்ளது

வெங்கலி = கொடிய கலி

வெங்கடத்துக் களிறு = கொடிய பாலைவனத்திலுள்ள யானை

வெட்டென்றிருத்தல் = இசைந்திருத்தல்

வெண்கலப் பத்திரம் = வெண்கலத்தால் செய்த இலை. (பத்திரம் – இலை.)

வெண்ணெய் தொடுவுண்ட = வெண்ணெயை வஞ்சனையால் எடுத்து உண்ட

வெண்ணெற்கு = வெண்மையான நெல்

வெந்தாரென்பும் = பிரேதங்களின் எலும்பு

வெள்கி = வெட்கப்பட்டு

வெள் வரைப்பு = கிழக்கு வெளுக்கை

வெள்ளச்சுகம் = அளவு கடந்த சுகம்

வெள்ளறை = வெண்மையான பாறைகளால் இயன்ற மலை (சுவேதாத்ரி எனப்படும்)

வெள்ளித்தலை = வெள்ளித்தண்டு

வெள்ளிப் பெருமலை = பெரிய வெள்ளிமலை

வெள்ளியார் = சுக்கிரன்

வெள்ளியெழுந்து = சுக்கிரன் உதயமாகி

வெள்ளுயிராக்குதல் = சாத்துவிக்னாக ஆக்குதல்

வெள்ளெனல் = வெளுத்தல்

வெள்ளேறன் = வெண்மையான ரிஷபத்தையுடைய உருத்திரன்

வெள்ளை நுண்மணல் = வெண்மையான நுட்பமான மணல்

வெள்ளை விளி சங்கு = வெண்மையானதும், எல்லோரையும் அழைப்பதுமாகிய சங்கு

வெளிய நீறு = அஞ்சன சூர்ணம்

வெறி = வெறியாட்டு

வெறியோடிற்று = வெறிச்சென்று இருக்கிறது

வேகவதி = காஞ்சிபுரத்தில் முன்னாளில் ஓடிய ஓர் ஆறு. செய்த வேள்வியை அழிக்கவர நான்முகன் திருமாலைக் கொண்டு அடக்கினான்

வேங்கடத்தான் = திருமலலையில் எழுந்தருளியிருப்பவன்

வேங்கடநாடர் = திருமலையை நாடியவர்

வேங்கடவாணன் = திருவேங்கடமலையில் இருப்பவன்

வேங்கடவேதியன் = வேங்கடமலையிலுள்ள ஶ்ரீனிவாசன்

வேட்டத்தைக் கருதாது = ஆசைப் பெருக்கத்தைக் கருதாமல்

வேடர் தெழிப்பு = வேடர்களின் ஆரவாரம்

வேடார் திருவேங்கடம் = வேடர்கள் நிறைந்த திருமலை

வேடுமுடை வேங்கடம் = வேடர்கள் நிறைந்த திருமலை

வேதகீதன் = வேதத்தினால் புகழ்ந்து பாடப்படுபவன்

வேதத்தினுட் பொருள் = திருவாய் மொழியில் நிற்கப் பாடியது

வேதநாவர் = அந்தணர்கள்

வேதநான்கைந்து தீ வேள்வி = நான்கு வேதம், ஐந்து அக்கினி, ஐந்து மகா யக்ஞம்

வேதநூற் பிராயம் நூறு = வேதநூல் பிரகாரம் மனிதர்களுக்கு வயது நூறு

வேதப்பிரானார் = எம்பெருமான்

வேதாந்த விழுப்பொருள் = வேதாந்தங்களில் சொல்லபடுகின்ற சிறந்த அர்த்தங்கள்

வேம்பின் புழு = வேப்பமரத்திலுண்டான புழு

வேம்புங்கறியாதல் = வேப்பிலையும் கறியமுதாகும்

வேய் = புல்லாங்குழல்

வேயர் = அந்தணர்

வேயர் தங்கள் = அந்தணர்களுடைய

வேல் வலவன் = வேற்படையில் வல்லவன்

வேல்வலவனாலிநாடன் = வேற்படையை ஆளுகின்ற திருவாலி நாட்டுக்கதிபன்

வேல = வெறியாட்டாளனே

வேலால் துன்னம் பெய்தல் = வேலால் துளைத்தலை இடுதல்

வேலை மோதும் மதிள் = கடல் அலைகள் வந்து மோதுகின்ற மதிள்

வேழப் போதகம் அன்னவன் = யானைக்குட்டி போன்றவன்

வேள் = முருகன்

வேள்வு = வேள்வி, யாகம்

வேளுக்கை = காஞ்சிபுரத்திலிருந்து இரண்டுகல் தொலைவில் உள்ளது

வேளுக்கைப்பாடி = வேளுக்கை என்ற திருப்பதி

வேனிலஞ்செல்வன் = சூரியன்

வைகுந்தக் குட்டன் = நித்திய சூரிகளுக்குப் பரிந்து நோக்கும்படியான பருவத்தை உடையவன்

வைகுந்தம் = ஸ்ரீவைகுண்டம்

வைகுந்த விண்ணகர் = திருநாங்கூரிலே உள்ள வைகுந்த விண்ண கரம் என்னும் திருப்பதி

வைத்தநாள் = ஈசுவரன் நியமித்த ஆயுள்

வைதிகன் = வேதநெறிப்படி ஆசார அனுஷ்டானமுள்ளவர்

வைதேகி = சீதை (தத்திதாந்த நாமம்)

வைப்பு = புதையல்

வையத்தேவர் = அந்தணர்